போம். அவளுக்கு மனவெழுச்சி இல்லாமலே போம். வீரியம் அற்றுப்போம். அவள் லட்சியமில்லாமல் திரிப வளைப்போல, எதனிலும் பற்றில்லாதவளாவாள்; நிக்கற்று மனங்கசந்து மனுஷத்துவேஷங் கொள்வாள்; சாவுசீக்கிரம் வராதாவென்று எதிர்பார்த்துக்கொண்டிருப்பாள்.

ஸரோஜம்:—உன்னோடு வாதிக்க என்னால் முடியாது. நீ அசாத்தியக்காரி.

மீனா:—தோழீ! உனக்கு ஏன் அப்படித் தோன்று கிறது தெரியுமா? நம்முள் உன்னைப்போன்ற ஸ்திரீ புருஷர்கள் பலர் உண்டு. நீங்களெல்லாரும் வான்மலர் கொய்து வயிறு நிரம்பி மகிழ்வீர்கள்; அழகிய கனவு கண்டு அகங் களிப்பீர்கள். எனவே, பிரத்திக்ஷமாக இருக்கிற அவஸ்தையை மறந்து, அல்லது ஒளித்து வீணே மனோராஜ்யம் செய்வீர்கள். இங்ஙனமாக, எளிய பாலிய விதந்து ஒருத்தி சமூகக் கட்டுப்பாட்டின் கொடுமையினால் மறுமணம் செய்துகொள்ளமுடியாதவளாகி வாழ்நாள் முழுதும் துன்பத்துக்காளாகி நிமிஷந்தோறும் பிறரால் இகழ்ந்து அவமதிக்கப்படுகிறவளை, மனோராஜ்யக்காரர் களாகிய நீங்கள் பதிவிரதாசிரோமணி எனப் பாராட்டு கிறீர்கள். அந்தக் கதி நமக்கு வந்தால் அந்நிலைமையின் உண்மை தெரியும். அப்பொழுது பதிவிரதா தர்மக் கனவு பறந்துபோம். அந்தக் கனவினால் வாய்ந்த கடுங்கஷ்டம் வெட்டவெளிச்சமாகும். பலவந்தமாக வைதவ்ய வாடிக் கையை அனுசரிக்கிறவள் எவளும் தன் வாழ்க்கை சிறந்த தெனக் கொண்டாடுவதை நான் கேட்டதே இல்லை.

ஸரோஜம்:—கணவனை இழந்து நான் ஒருவேளை கைம்பெண்ணானால்—கைம்பெண் ஆகவேண்டுமென நான் விரும்பவில்லை—மறுமணம் செய்துகொள்ளக் கூடாதெனச்

சங்கற்பித்துள்ளேன். இறந்த கணவனது ஞாபகார்த்தமாக நற்பணிகள் ஆற்றுவதிலே வாணுளை விநியோகிப்பேன். ஆனல், நான் சொல்கிறபடி, அறுதாலி யாகமாட்டேன் என்றே எண்ணுகிறேன்.

மீனு:—ததாஸ்து. ஆனல், நாம் எதிர்பாராத வைதவ்யம் நேர்ந்துவிட்டால், நீ இப்பொழுது சொல்கிற படி செய்வது யுக்தமென நான் சொல்லமாட்டேன். இறந்தபிறகு தன்னையே சதாகாலம் நினைந்துருகி மனைவி அன்பு பாராட்டத் தக்கவாறு ஒழுகும் உத்தமக் கணவன் அருமையினும் அருமை. உள்ளபடிபார்த்தால் எல்லாரும் நடுத்தரமான நற்குணம் வாய்ந்தவர்களே. கணவர்கள் பெரும்பாலும் இப்படித்தான் இருக்கிருர்கள். இதற் கேற்றபடி மனைவிகளும் இப்படியே இருக்கிருர்கள். உத்தம ரென்று எவரையும் சொல்வதற்கில்லை; அதமரென்றும் இகழ்வதற்கில்லை. விண்ணும் மண்ணும் கலந்தாற்போல் இருக்கிருர்கள். பலர் வெறும் மண்ணைப்போன்றவர்களாய் இருக்கிருர்கள். மண்ணிலும் நாற்றமெடுத்த மண் என்ன லாம். அருமையாக எங்கேயோ ஒருவர் ஆகாசத்தைப் போன்ற தூயவரெனவே சொல்லலாம். இப்படிப்பட்டவர் கள் தங்கள் மனைவியர் மனத்தில் நீ சொல்லிய அளவு பக்தியை ஊட்டத்தக்கவர்களாகலாம். ஆனல், அதற் கேற்றபடி அம்மனைவியரும் அத்தன்மையராக இருக்க வேண்டும்.

ஸரோஜம்:—நல்லது, நான் என்ன, விண்ணு மண்ணு?

மீனு:—பாதி விண் பாதி மண். பூமியில் வேரூன்றி ஆகாசத்தில் அரும்புகின்றனை.

ஸரோஜம்:—(வயிற்றெரிச்சலோடு) சந்தோஷம், நீயோ?

மீனு:—தொண்ணூற்றென்பதும் ஒன்றும் நான் மண், மண்ணுக்கே உரியவள். மண்ணிற் பிறந்து மண்ணி னல் உடம்பெடுத்து மண்ணில் உழன்று மண்ணை உண்டு மண்ணை யண்டி மண்ணையே மகிழ்ந்து மண்ணோடு மண்ணுக மடியும் மாண்புடையவள். விண்ணின் நினைவு ஒருபோது தோன்றல் கூடும். கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்ப மேன்? சாக்கடைப் புழுவுக்கு அதுவே சுவர்க்கம். அது போல எனக்கு இம்மையே இன்பம். நடைமுதல் வாழ்க்கை வியவகாரத்திற்கு உரியனவே எனக்கு உரியவை. மறுமையும் மனோராஜ்யகுணமும் எனக்கு இல்லை.

ஸரோஜம்:—மறுமை நினைவு உனக்கு ஒரு பங்கே யானுலும், அந்த ஒரு பங்கு எனது ஐம்பது பங்கினும் அதிகமாக உயர்ந்து ஓங்கி ஆகாயம் அளாவத்தக்கதாக இருத்தல் இயலும். ஆதலின், மனோராஜ்யம் செய்வதில் என்னைக்காட்டிலும் நீயே மிஞ்சினவளாயிருக்கலாமே.

மீனு:—அப்படி இருந்தாலும் இருக்கலாம். அதி மாத்திரையான மின்வலியைப்போல, அந்தப் பரநினைவு தோன்றுவதும், ஓங்குவதும் ஒய்வதும் எனக்குத் தெரி வதில்லை. சாதாரண மின்வலியானல் அதன்வேகம் நமது தேகத்தில் தாக்குவது நமக்குப்புலப்படும். அந்த வேகம் மிகுந்தால் அது தாக்குவதே தெரியாது; நமக்கு வாதையுணர்ச்சி யிராது. இப்படிப்பட்ட அதிமாத்திரை யான மின்வலிப்பிரயோகத்தால் கொலைக்குற்றவாளிகளைக் கொல்வது உத்தமமென்றும், தூக்கிட்டுக் கொல்வதனல் துன்ப உணர்ச்சி தோன்றுமாதலின் இது அதமமான வித மென்றும் சொல்கிறுர்களல்லவா? கொஞ்சம் வெளிச்ச மானல் நமக்குக் கண் தெரிகிறது; எல்லாவற்றையும் பார்க் கிறோம். அதிகம் வெளிச்சமானல் கண் தெரிவதில்லை;

எல்லாம் இருளாகின்றது. அதுபோல, எனக்குள்ள ஒரு பங்கு மறுமை உணர்ச்சி அதிமாத்திரையாகி, எனக்குப் புலப்படாது வியவகரிக்கின்றது போலும்.

ஸரோஜம்:—ஆகவே, இளமையில் நான் கணவனை இழந்தால், வேறொருவனை மணப்பேனென்று நீ நினைக்கிறாய் அல்லவா?

மீனு:—ஆம்; மனோராஜ்யமாக நீ கட்டிய ஆகாயக் கோட்டை மாயமாய்ப் போகும்போது நீ மறுமணம் புரிந்து கொள்வாய். அப்படிச் செய்யாவிட்டால் அது உனது மூடத்தனமாகும்; வாழ்க்கை வைபவங்களனைத்தையும் நீ வீணே இழப்பாய்.

இந்த வார்த்தைகள் ஸரோஜத்தின் மனத்தை உறுத்திக்கொண்டிருந்தன. மீனு சொல்லிய விஷயங்களைக் குறித்து இவள் அன்றிரவு ஆழ்ந்து ஆலோசித்தாள். மேலும் மேலும் சிந்தனை செய்து பார்த்ததில், தனது உத்தம பாவனையையும், அந்த பாவனையில் தனக்குள்ள பற்றையும், தன் சங்கற்பத்தின் உறுதியையும் தோழி மீனாக்ஷி உள்ளபடி கணிக்காமல் ஏனோதானோவென்று லகுவாக மதித்துப் பேசினள் எனத்தேறித் தெளிந்தாள். 'என்ன வந்தாலும் வரட்டும், என் வார்த்தைக்குக் கட்டுப் பட்டு, சொன்னபடியே ஆற்றிச் சாதிப்பேன்' எனத் திடமாகச் சங்கற்பம் செய்துகொண்டாள்.

இந்த நினைவின் வழியே செல்லும் ஸரோஜத்தின் மனம் தன் விவாகத்தின்மீது சார்ந்து உலவியது. அப்போது தனக்கும் கலியாணம் ஆகுமோ எனப் பிரமித்தாள். வைதிக குடும்பத்தினரான தன் தோழிகள் எல்லார்க்கும் முன்னாலேயே கலியாணமாகிவிட்டது. அவர்களிற் சிலர் புக்ககத்தில் வாழ்ந்து அகமுடையானை

இழந்து அவலமாகி அன்னைமனை சார்ந்தார்கள். 'ஐயோ பாவம்! அவர்களுடைய ஜன்மம் என்ன ஜன்மம்! இளமையில் அறுத்து இகபோகங்களைத் துறந்து ஏகாங்கியானார்களே. நிச்சயமாக அவர்கள் இனி மறுமணம் செய்து கொள்ளார்கள். அதுதான் நல்ல கொள்கை. அதுவே உத்தம ஜீவனம். நற்கதியேற்கும் நன்னடை அதுவே. ஆனால், அவர்களிற் பெரும்பான்மையோர் துக்கக்கடலில் ஆழ்ந்திருப்பது போல் தோன்றுகிறதே. ஏன் அப்படி இருக்கிறார்களென்று தெரியவில்லை. ஒருவேளை அவர்கள் தம் இச்சைக்கு இசைந்தவனை மணக்காமல் பெற்றோர் பொறுக்கி யெடுத்தவனை மணக்கவேண்டி வந்ததனால் இவ்வாறு துன்புறுகிறார்களோ என்னவோ? இல்லாவிட்டால், கணவனோடு தாம் அனுபவித்த இன்பத்தையும் எழிலையும் ஏற்றத்தையும் நினைந்து ஏனைய இன்பங்களை வெறுத்துத் தள்ளுமளவு அன்பு அவர்கள் மனத்தில் குடிகொண்டிருக்குமே. ஆனால், வயதிலும் விவேகத்திலும் வாழ்க்கை வியவகார அனுபவத்திலும் தம்மிற் சிறந்த பெற்றோர்கள் தேடித் தேர்ந்தெடுக்கிற கணவனைக்காட்டிலும், ஏதும் அறியாத இளம்பெண்கள் தம் இஷ்டப்படி இணங்குகிற கணவன் உத்தமன் ஆவனோ ? முதியோரைக் காட்டிலும் இவர்களுக்குத் தாரதம்மிய ஞானமும் விவேகமும் அதிகமாமோ ?' என்று ஸரோஜம் தனக்குத்தானே பேசிக்கொண்டாள். இந்த விசாரத்தினால் இவள் மனத்தில் குழப்பம் ஏற்பட்டது, கவலை மிகுந்தது, அமைதி குலைந்தது. விசாரம் மிக்கவருக்கும் மனமும் தேகமும் ஒரு நிலையில் நில்லா வல்லவோ? இந்தச் சங்கடம் பொறுக்க முடியாதல்லவா? இந்தத் தொல்லையைத் தவிர்ப்பதற்கு வழி ஒன்றே உளது. அதாவது தூக்கம். தூக்கம்

தூக்கத்தில் மறையும். ஆனல், தூக்கமோ வராது. ஆதலின் இவள் விளக்குகளை அணைத்துவிட்டுப் படுக்கையிற் படுத்துக் கண்ணைக் கெட்டியாக மூடிக்கொண்டு பலவந்தமாகத் தூக்கம் வருவித்துக் கொண்டாள்.

மறுநாள் மாலையில் பள்ளிக்கூடம் விட்டு வந்தபின், இவள் தன் தந்தையாகிய ராமதாஸ் என்பவரோடு *மரீனவில் உலவிக்கொண்டிருந்தாள். அப்பொழுது கலாசாலை மாணவனொருவன் எதிரே வந்துகொண்டிருந்தான். அவனது ஆடை அவமன்றி ஒழுங்குமின்றிக் கேவலமாயிருந்தது. ஆனல், அவனது கண்கள் உள்நோக்குடையனவாகத் தோன்றின. பார்ப்பதற்குக் கண் வெளியில் திறந்திருந்தாலும் அவனது மனம் வேறு எங்கோ சஞ்சரித்துக் கொண்டிருந்ததெனச் சரேலெனச் சொல்வதற்காகும். ஆழ்ந்த சிந்தனையும் மனோராஜ்யமும் அவன் கண்ணிற் புலப்பட்டன. அதனல் அவன் ஆடைமுதலான வெளி உலகத்து வியவகாரங்களில் கவனம் செலுத்தவில்லையென நாம் ஊகிப்பதற்காகும். அப்படிப்பட்டவனுடைய கண்ணொளி ஸரோஜத்தின் முகமண்டலத்தில் ஒரு கணப்போது அன்புக்குறியாக அமர்ந்தது. இவளும் அவ்வாறே அவனை உற்று நோக்கினள்; சிறிது நேரம் பின்தங்கிநிற்க இவள் ஆசைப்பட்டிருப்பள்; ஏனெனில், புதிய விதமானதோர் உற்சாகமும் அன்பும் இவள் உள்ளத்தில் உதித்தன. அவ்வன்பு மீனவினிடத்தில் உள்ளது போலல்லாது, வேறு விதமாக இருந்தது. அது எத்தகையதென இவளுக்குச் சொல்ல முடியவில்லை. ஆயினும், இவளுடைய தந்தை வழக்கம்போல முன்செல்ல இவளை விரைவுபடுத்தினர்.

---

*மரீன சென்னை கடற்கரையோரத்துச் சிங்கார உலாச்சாலை.

ஆதலினுல், தன் மனத்தில் இந்தப் புதிய உணர்ச்சி யெழுப்பிய உன்மத்தன்போன்ற இளைஞனை விட்டு இவள் முன் நடக்க வேண்டியவளாயினள். 'அவன் யாரோ! அவனைப் பார்த்தால் சாதுவான பிள்ளை யென்று நிச்சயமாகச் சொல்லலாம்; படாடோபம் சிறிதுமில்லை, கர்வமில்லை, அமைதியும் ஆழ்ந்த சிந்தனையும் அவனுடைய கண்களில் விளங்குகின்றன. அது எவ்வளவு மனோகரம்! பெரிய எண்ணங்களும் தீர்க்காலோசனையும் அவன் மனத்தில் குடிகொண்டிருக்கின்றன என்பதற்கு அதுவே அறிகுறி. அதனுல், அவனது அன்பும் தீர்க்கமாகவே இருக்க வேண்டும். அப்படிப்பட்ட அன்புதான் சரியான அன்பு' என்று அவனது குணங்குறிகளை வகையாகச் சிந்தித்துக் கொண்டிருந்ததனுல் இவளுடைய மனம் பின்னே இழுக்க, இவளுடைய கால், தந்தைக்கு அஞ்சி முன்னே இழுத்தது. ஆதலால், இவளுடைய நடை மெலிந்து சோர்ந்தது. அப்போது தந்தை, 'ஸரோஜம்! என்ன சிந்தித்துக்கொண்டிருக்கின்றனை? ஏன் இவ்வளவு மெதுவாக நடக்கின்றனை?' என்று வினவினர். இவள் சற்று ஓடி அவரை எட்டிப் பிடித்து, 'விவாகத்தினுல் மனிதருக்குச் சுகமும் சந்துஷ்டியும் நிஜமாக அதிகரிக்குமோ என்று சும்மா நினைத்துக் கொண்டிருந்தேன்' என்றனள்.

ராமதாஸ்:—விவாகம் என்பதனுலேயே எல்லாம் வந்துவிடாது. (விவாக) பாத்திரத்துக்குத் தக்கபடி ஆடும் அந்தப் பாக்கியம். ஒத்த தம்பதிகளானுல் சுகானந்தம் முன்னினும் மிகும். ஒவ்வாத தம்பதிகளானுல் முன்னினும் துன்பம் மிகும்.

ஸரோஜம்:—பராக்குப் பார்வை யுள்ளவர்கள் நல்ல நாயகராவா ரென்று உமக்குத் தோன்றவில்லையா?

ராமதாஸ்:—என்ன கேள்வி? அங்ஙனமன்று; நல் விழிப்பும் மேற்பார்வையும் உள்ளவர்களே உத்தம கணவ ராவா ரென்று எனக்குத் தோன்றுகிறது. மனோராஜ்யம் செய்பவர்கள் பெரும்பாலும் தூங்குமூஞ்சிகள். அவர்கள் எதற்கும் பயன்படார். அவர்களுக்கு வெளி உலக மெல்லாம் சூனியம்; வெறும் பாவனையே அவர்களுக்குப் பிரதானம். அவர்களுடைய பாவனை வியவகாரத்திற்கு இசையாது.

ஸரோஜம்:—அப்பா! பாவனையையே பிரதானமாகக் கொண்டவர்களை உங்களுக்குப் பிடிக்காதோ?

ராமதாஸ்:—எனக்குப் பிடிக்குமென்று நான் சொல் வதற்கில்லை. பாவனைகளைக்காட்டிலும், யதார்த்தமானவை களே எனக்கு இனிமையானவை. யதார்த்தமானவை களாவன, உள்ளதை உள்ளபடி தெரிந்து வியவகரித்தல். பாசி பிடித்துத் துர்நாற்றம் வீசிக்கொண்டிருக்கிற ஒரு சிறு குட்டையை இந்திரபுஷ்கரணி யென்று பாவித்து அதனில் மூழ்குவது பாவனுப்பிராதானியமாகும். அந்தக் குட்டையிலுள்ள நீரின் அசுத்தத்தன்மையைத் தெரிந்து அதனை ஒதுக்குவதே யதார்த்தப்பிராதானியமாகும்.

அந்த வார்த்தையைக் கேட்டு ஸரோஜம் மறுமொழி சொல்லாமல் மௌனமாக முன் நடந்தனள். தந்தை சொல்லியது அவளுக்கு ஒப்பாகவில்லை. அவருடன் வாதிப்பதனால் பயனில்லை யெனத் தேர்ந்து, வாதாடாமல் அவள் அதோடு அதை விட்டுவிட்டாள்.

மூன்றுநாள் சென்றபின், ராமதாஸும் ஸரோஜமும் தங்கள் வீட்டுத் தாழ்வாரத்தில் 'நாஸ்தா' பண்ணிக் கொண்டிருந்தார்கள். அப்போது தபாற்காரன் வந்து ராமதாஸின் கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்தான்.

ராமதாஸ் அதை வாசித்தபோது அவர் முகத்தில் ஆச்சரியக்குறி தோன்றியது. அதைத் தமது மகளிடம் கொடுத்து, 'இதை வாசித்துப்பார். இவன் யாரோ மனோராஜ்யக்காரன்!' என்று அவர் சொன்னார். ஸரோஜம் கைநடுங்க, அந்தக் கடிதத்தை யேந்தி வாசித்தாள்:

'ஐயா!

இரண்டுநாளைக்கு முன்னால் மாலைப்போழ்தில் நீங்களும் அற்புத சௌந்தரியவதியாகிய உங்கள் அருமைப் புதல்வியும் கடற்கரையுலாவில் எனக்கு எதிரே வந்து கொண்டிருக்கக் கண்டேன். நான் அவளை உற்றுநோக்க, அவளும் என்னை உற்றுநோக்கினள். அக்கணமே உரிய வேளை ஒத்துவந்ததெனத் தெரிந்தேன். என் மனத்திற்கு இசைந்த பெண்மணியைக் கண்டேனெனக் கொண்டேன். உங்கள் புத்திரிகா ரத்தினத்தின்மீது எனக்குள்ள கரை கடந்த காதலும் வியப்பும் கண்ணியமும் சொல்லிலும் அடங்கா, எழுத்திலும் அடங்கா. இவ்விஷயமாக உங்களைக்கண்டு நேரில் பேச எனக்குச் சந்தர்ப்பம் கொடுப்பீர்களாக. நான் 'லா காலேஜில்' படித்துக் கொண்டிருக்கிறேன். இதுவரையில் எல்லாப்பட்டப் பரீக்ஷைகளிலும் திருப்திகரமாகத் தேறியிருக்கிறேன்.

ஒருவரி பதில் தயை செய்ய வேண்டுகிற
யதார்த்தவாதி திரிவிக்ரமன்.

குறிப்பு:—அவள் பெயர் ஸரோஜம். அவளது பாவனையில் ஏற்பட்ட அருங்காதல் அவளது கமலக் கண்ணின் வழியே என்மனத்தில் ஆழப் பதிந்து உள்ளத்திற் கிளறுகின்றது. ஸரோஜம்! ஆஹா என்ன அழகியபெயர்! எவ்வளவு பொருத்தம்! தி.

இந்தக் கடிதத்தை ஸரோஜம் உற்சாகத்தோடு மேலும் மேலும் மும்முறை படித்தனள். அவன் தன்னை மறக்கமாட்டானென்று இவளுக்கு எப்படியோ மனத்தில் தோன்றிக்கொண்டேயிருந்தது. தான் நினைத்தபடி அவன் மறவாமல் இருக்கிறானென்று தெரிந்து இவள் மகிழ் வுற்றாள்.

ராமதாஸ்:—நல்லது, ஸரோஜம், அந்தக் கடிதத்தி லேயே மூழ்கிப் போயிருக்கிறாயே, ஏன்? அந்தப் பையன் யார்? நான் அவனைப் பார்த்ததாக ஞாபகமே இல்லையே!

ஸரோஜம்:—(நாணமுற்று) அவன் இன்னாராகத் தான் இருக்கவேண்டுமென்று ஊகிக்கிறேன். ஐஸ் ஹவு ஸுக்கு எதிரே அன்றைக்குப் பார்த்தோமே, உறக்கக் கண்வாய்ந்த இளைஞரை.

ராமதாஸ்:—இம்! உறக்கக்கண் உள்ளவர்கள் உத்தமக்கணவராவரோவென்று நீ அன்றைக்குக் கேட்ட தற்குக் காரணம் இப்போது எனக்குத் தெரிகிறது.

தந்தை இவ்வார்த்தை சொல்லியவுடனே, ஸரோஜம் மறுபடியும் கூச்சமுற்றுச் சிறிது நேரத்தில் அது தெளிந் தாள்.

ராமதாஸ்:—சரி, இப்பொழுது என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய்?

ஸ்ரோஜம்:—என்ன செய்யவேண்டுமென்று உங்க ளுக்குத்தான் தெரியும். எனக்கென்ன தெரியும்?

ராமதாஸ்:—ஆபீஸில் இன்றைக்கு அந்தப் பையனை வருவித்துப் பேசி, நல்ல வரன்தானோ எனப் பார்க்கிறேன். நல்ல வரனெனத் தோன்றினால், அவனை நாளை மாலையில் சிற்றுணக்கோஷ்டிக்கு அழைத்து வருகிறேன்.

சந்தோஷத்தினல் ஸரோஜம் பரவசமாயினள். ராமதாஸ் மனைவியை அழைத்து இந்தச் சங்கதியை யெல்லாம் சொல்லினர்.

அன்றுமாலையில் ராமதாஸ் தமது ஆபீஸில் திரிவிக்ரமனை வருவித்துப் பேசினர். அந்தப் பையன் ஏழை யென்று தெரிந்தது. அவனது பெற்ருேர் ஒரு சமயம் நல்ல பணக்காரர்களாக இருந்தனராம். அவனைப் பார்த்து ராமதாஸ், 'உனக்கு வரதக்ஷிணை கொடுப்பே னென்ருவது, என் பெண்ணுக்கு ஸ்ரீதனம் அளிப்பே னென்ருவது நீ எதிர் பார்க்கமுடியாது' என்ருர்.



திரிவிக்ரமன்:—அப்படிப்பட்டதொன்றும் எனக்கு வேண்டாம்.

ராமதாஸ்:—மாதம் ஒன்றுக்கு முந்நூறுரூபாய் சம்பளம் பெருதவனுக்கு என்பெண்ணை விவாகம் செய்து கொடுக்க எனக்கு இஷ்டமில்லை. இவளுடைய தமக்கைகள் எல்லாரையும் அப்படியே கொடுத்திருக்கிறேன்.

திரிவிக்ரமன்:—இரண்டு மூன்று வருஷத்தில் நான் வக்கீலாக வந்து மாதம் முந்நூறு ரூபாய் சம்பாதிப்பேன்.

ராமதாஸ்:—இளங்கன்று பயமறியாது; இளமையில் இனிமையே தோன்றும்; ஆசை ஆகாசத்தை அளாவும்; வயது ஏற ஏற அனுபவத்தில் அவ்வாசை அவலமாகும்; எவ்வளவு கெட்டிக்கார வக்கீலாயிருந்தாலும் தக்கவர்களுடைய ஆதரவு இல்லாவிட்டால், பின்னேயிருந்து தாங்குபவர் இல்லாவிட்டால் மாதம் ஒரு நூறு ரூபாய் கிடைப்பது குதிரைக்கொம்பாக இருக்கும். இது அனுபவ ஸித்தம். இப்படித் திண்டாடுகிற வக்கீல்கள் சிலரை எனக்குத் தெரியும்.

திரிவிக்ரமன்:—அவர்களுக்கு ஊக்கமில்லைபோலும்; முண்டியடித்து நெட்டித்தள்ளினால் முன்னுக்கு வரலாம்.

ராமதாஸ்:—அப்படியில்லை. ஏதாவது இருந்தாலல்லவா அதை நெட்டித்தள்ளலாம்? முண்டுவதற்கும் நெட்டுவதற்கும் அவர்களுக்கு இடமே இல்லை!

திரிவிக்ரமன்:—நான் மாதம் முந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறபோது உங்கள் பெண்ணை எனக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுக்கலாம். ஆனால், நமது நாட்டில் மாதம் ஒருநூறுரூபாய் வைத்துக்கொண்டு ஒரு கணவனும் மனைவியும் சுகமாக ஏன் காலம் கழிக்க முடியாதென்று நினைக்கிறேன்.

ராமதாஸ்:—எல்லாரும் வயிறு வளர்க்கிறார்கள். அப்படி இழிதகையாகக் காலங்கழிக்கும் வாழ்க்கை எனக்குப் பிடிக்காது. அது ஒரு வாழ்க்கையா? அது எங்களுக்கு வழக்கமில்லை. வெறும் சோறும் தண்ணீரும் கிடைத்தாற் போதுமென்று இராமல், மனைவி மக்களைச் சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும் வைத்து ஆதரிக்கத்தக்க அளவு வரும்படி வாய்ந்தபின்னரே ஒருவன் ஒரு பெண்ணை விவாகம் செய்துகொள்ளவேண்டுமென்பது எனது அந்தரங்க அபிப்பிராயம். எப்படியானாலும், நீ மாதம் முந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறபோது வந்து என் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளுகிறேன் என்பதனாலே நமக்குள் அவ்விஷயத்தைப்பற்றித் தர்க்கமில்லை. நாளைக்கு நீ மாலைச்சிற்றுணவுக்கு எங்கள் வீட்டுக்கு வா. அந்தச் சமயத்தில் என் பெண்ணைப்பார்த்துப் பரிச்சயம் செய்து கொள்ளலாம்.

மறுநாள் ராமதாஸ் வீட்டில், உத்தேசித்தபடி சிற்றுணக்கோஷ்டி கூடியது. மனோராஜ்யத்தில் நுழைந்த

உறக்கக் கண்ணனுன திரிவிக்ரமன் வீட்டுக்குள்ளே போய்க்கொண்டிருக்கையில், ஸரோஜம் தாழ்வாரத்தில் நிற்பதைப் பார்த்தான். இவள் முன்னினும் மும்மடங்கு அழகாக அவனுக்குத் தோன்றினுள். மனோரஞ்சிதமான பட்டாடையுடுத்து இவள் பாங்காக நின்றுகொண்டிருந்த னள்.

தனது விசாலமான கண்களினுல் இவளும் அவனைப் பார்த்தாள். அவன் உடனே தன் கூரியபார்வையை அப்பால் செலுத்திவிட்டான். இவள் தேநீரைக் கொண்டு வந்து கொடுத்தபோது திரிவிக்ரமனுடைய கண்கள் பார்க்க நாணின. தனக்கு அளிக்கப்பட்ட அந்தத் தேநீரை ஸரோஜந்தான் போட்டிருக்கவேண்டுமென்று அவனுக்குத் தோற்றியது; அப்போது அவனுக்கு உண்டான ஆனந்தத் துக்கு அளவே இல்லை.

அவர்கள் சிற்றுண அருந்திக்கொண்டிருக்கும்போது திரிவிக்ரமன் உபகாரச்சம்பளத்திற்கு விண்ணப்பம் போட வேண்டுமென்று ராமதாஸ் கூறினுர். அச்சம்பளத்தைக் கொண்டு இந்தியன் சிவில் சர்விஸ் பரீக்ஷைக்குப் படிக்க வேண்டுமென்றும் அவர் கூறினுர். அதிகச் சம்பளத்தைச் சீக்கிரமாக அடைய அது ஒரு வழி என்று எடுத்துச் சொன்னுர். அத்தகைய உபகாரச்சம்பளங்களுக்கு முன்பே விண்ணப்பம் போட்டும், அதில் ஒன்றும் பிரயோஜன மில்லை யென்று திரிவிக்ரமன் பதிலளித்தான்.

திரிவிக்ரமன் அவ்விடத்தைவிட்டுச் சென்றபிறகு, இந்தப் பையன் ஏழையாயிருக்கிருன்; பரீக்ஷகளில் முதல் வகுப்பில் தேறியிருக்கிருன். பெரிய உத்தியோகம் கிடைக்குமென்று நம்பிக்கொண்டிருக்கிருன். இக்காலத்தில் இவைகளெல்லாம் பிரயோஜனப்படா. இவன் நம்முடைய

ஸரோஜாவுக்கு ஏற்ற கணவனுவாஞ என்பது எனக்குத் தெரியவில்லே, நீ என்ன சொல்கிருய்?' என்று ராமதாஸ் தம் மனைவியிடம் கூறினுர்.

'அவளிஷ்டம் எப்படியோ, அப்படிச் செய்யுங்கள்' என்ருள் அவள்.

'சரோஜா! நீ என்ன சொல்கிருய்?' என்று ராமதாஸ் கேட்டார்.

'அவர் ஏழையோ, பணக்காரரோ அதைக் குறித்து நான் கவலேப்படுவதில்லே. அவருக்கு உபகாரச்சம்பளம் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் எனக்கு நிமித்த மில்லே. என்பால் காதலுடையவராக இருக்கவேண்டும். அவர் என்னேக் காதலிக்கிருர் என்று நான் திடமாகச் சொல்லக் கூடும். ஆகவே, அவர் என்னே ஏற்றுக்கொள்ளும் பக்ஷத் தில் நான் அவரையே கணவராக அடைவேன்.'

'வாழ்வதற்குப் பணம் வேண்டுமே, அதற்கென்ன செய்வது?

'சர்வகலாசாலேப் பட்டங்களேப்பெற்ற ஒருவர் எங்களுக்குச் செலவிற்கு வேண்டிய திரவியத்தைச் சம்பா திப்பார் என்பதில் சந்தேகமில்லே. உண்மைக் காதலினல் பிணேக்கப்பட்ட எங்களுடைய வாழ்க்கையின் சுகமே எங்களுக்குப் போதுமானது.'

'நீ அசட்டுத்தனமான மனக்கோட்டைகளேக் கட்டிக் கொண்டிருக்கிருயே. உன்மீது குறை கூறுவதில் பயனில்லே. என்னுடைய இளம்பிராயத்தில் நானும் அவ்வாறுதான் ஆகாசக்கோட்டைகளேக் கட்டிக்கொண் டிருந்தேன். இதற்கு இப்போது அவகாசமில்லே. உன்னு டைய அபிவிருத்தியை நாம் கவனித்துக்கொண்டிருப்

போம். பிறகு அதைக் குறித்து நிச்சயிக்கலாம்' என்று ராமதாஸ் சொன்னார்.

அன்றையதினம் இரவு ஸரோஜா நல்ல கனவுகளைக் கண்டாள்!

இரண்டு தினங்களுக்குப் பிறகு ராமதாஸ் இவளைக் கூப்பிட்டு, குழந்தாய்! அந்த ஆசாமி எவ்வளவு மோசக்காரனாகிவிட்டான், பார்' என்று சொல்லிக்கொண்டே அவள்கையில் ஒருகடிதத்தைக் கொடுத்தார். ஸரோஜா அக்கடிதத்தைப் படித்துப் பார்த்தாள். அதில் கீழ்க் குறித்தவை எழுதப்பட்டிருந்தன:—

'எனதன்புடைய ராமதாஸரே,

இக்கடிதத்தில் காணப்படும் விஷயங்களுக்காக என்னை மன்னிக்குமாறு நான் தங்களை வேண்டிக்கொள்கிறேன். நான் என்னுடைய சகோதரருடன் கலந்து பேசினேன். வரதக்ஷிணையில்லாமல் நான் கலியாணம் செய்துகொள்ளக்கூடாதென்று அவர் சொல்லிவிட்டார். நான் ஏழை என்றுமட்டுந்தான் எனக்குத் தெரிந்திருந்தது. என்னுடைய படிப்பு முடிவடையும்வரையில் எனக்கு வேண்டிய பணம் எனக்கிருக்கிறதென்று நான் எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுதுதான், நான் ஏழையாக இருப்பது மட்டுமன்றிக் கடனாளியென்றும் அறிந்துகொண்டேன். ஆகவே எனக்கு வரதக்ஷிணை கொடுக்கும் ஒரு மனிதருடைய பெண்ணையே நான் கலியாணம் செய்துகொள்ள வேண்டியிருக்கிறது. அன்பு மிகுந்த கனவுகளையும், ஆசையை உண்டுபண்ணும் நம்பிக்கைகளையும் நான் மறந்துவிடவேண்டியதுதான், முத்துமுத்தாக இருந்த பனித்துளிகளையெல்லாம் நொடியில் சூரியன் உறிஞ்சிவிட்டான். அவைகள் ஆவியாக

மறைந்துபோய்விட்டன. நான் இனிமேல் பொதுக் கிணற்றிற்குச் சென்று என்னுடைய தாகத்தைத் தீர்த்துக் கொள்ளவேண்டும். இனி அக்கிணற்றின் அசுத்தமான தண்ணீரையே நான் பருகவேண்டும்; என் வாழ்நாளை நான் அவ்வாறே கழிக்கவேண்டும். வரதக்ஷிணை கொடுக்கும்படி நான் தங்களைக் கேட்பேனென்று கனவிலும் கருதவில்லை. ஸரோஜாவைப்பற்றிக்கொண்டிருந்த கனவுகளை யெல்லாம் இனி நான் மனத்தைவிட்டு அகலும்படி துரத்திவிட வேண்டும். வயிற்றுவலிக்காரனுக்கு நல்ல கனவுகள் எவ்வாறு ஏற்படும்? தயை செய்து என்னுடைய மனோ நிலைமையை உள்ளபடி அறிந்துகொள்ளுமாறு நான் தங்களைப் பிரார்த்திக்கிறேன். தாங்கள் சௌக்கியமாக வாழ்வீர்களாக.

திரிவிக்ரமன்.

குறிப்பு:—வேறு தேசங்களுக்குச் சென்று படிப்பதற்காக அளிக்கப்படும் உபகாரச்சம்பளம் எனக்குக் கண்டிப்பாகக் கொடுக்கப்படமாட்டாதென்று கடித மூலமாக நேற்றையதினம் அறிவிக்கப்பட்டது. தயை செய்து என்னை மன்னித்து மறந்துவிடுங்கள்.

தி.

ஸரோஜா அக்கடிதத்தை இருமுறை படித்துப் பார்த்தாள். இவளுடைய கண்களில் தோன்றிய கண்ணீர் இவள் பார்வையை மறைத்தது. தன்னுடைய ஆவல் சிதறிப்போனதைக்குறித்து இவள் மிக வருந்தினாள். உன்னதக் கருத்துக்கள் சிறிதேனும் இல்லாமல் லௌகிகமான கொள்கைகளைத் திரிவிக்ரமன் கொண்ட செய்கை இவளுக்குக் கோபத்தை யுண்டுபண்ணிற்று. கடைசியாக இவள் சுபாவநிலைமையை அடைந்தாள். சிலர் பணத்தை

உத்தேசித்துத்தான் கலியாணம் செய்துகொள்ள வேண்டிய வராகின்றனர். அத்தகைய துரதிர்ஷ்டசாலிகளின் பரிதாப கரமான நிலைமையைக்குறித்து இவள் இரங்கினாள். ஆகவே, இவளுடைய தந்தை இவளைக் கேட்டபோது, 'நான் அந்த ஏழை இளைஞன்பால் இரக்கங்கொள்கின்றேன். அவரைப் போல ஆயிரக்கணக்கானவர்கள் நமது தேசத்திலிருக்கின்ற னர்; அவர் மிகுந்த கஷ்டஸ்திதியில் இருப்பதனால், காலத்துக்கேற்றவாறு நடந்துகொள்ளத்தான் வேண்டி யிருக்கின்றது' என்று இவள் பதிலுரைத்தாள்.

'இருக்கக்கூடும்; ஆனால் அதைக் குறித்து நமக்கென்ன கவலை? அவன் உனக்குத் தகுந்த நாயகனல்ல; அவனே அதை ஒப்புக்கொள்கிறான்; ஆகவே அவ்விஷயம் இத்து டன் முடிவடையட்டும்' என்று ராமதாஸ் சொல்லிவிட்டு, அக்கடிதத்தைத் துண்டுதுண்டாகக் கிழித்துக் குப்பைத் தொட்டியில் எறிந்துவிட்டார்.

* * *

'மீனா, நீ சொன்னது உண்மைதான். நமது தேசத்த வர் வான்மலரை நம்பிக்கொண்டிருப்பவர்களே. நமது எண்ணங்கள் எல்லாம் நமது வாழ்க்கையில் நிலைகுலைந்து நாசமடைந்துபோகின்றன. அநேக இளைஞர்கள் தாங்கள் காதலிக்கும் பெண்களைக் கலியாணம் செய்துகொள்ள முடியாமல் தவிக்கின்றார்கள். பணத்திற்காக வேறொரு பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளும்படி நேரிடுகிறது. அவர்களுடைய படிப்பிற்காகவோ வேறு குடும்பவிஷயங் களுக்காகவோ பணம் இன்றியமையாததாகிவிடுகின்றது' என்றாள் ஸரோஜா.

'நாகரிகம் மேலிட மேலிட, கொள்கைகளும் மூட நம்பிக்கைகளும் மறைந்துபோய்க்கொண்டேயிருக்கும்.

ஆராய்ந்தறியும் சக்தி விருத்தியடையும் இந்த இருபதாம் நூற்றாண்டில் நாகரிகம் விருத்தி யடைந்திருக்கின்றதென்பதில் சந்தேகமில்லை. ஆகவே புத்திக்கு எது நல்லதென்று தோன்றுகிறதோ அதைத்தான் நாம் செய்யவேண்டும். அட தெய்வமே! உன்னுடைய கண்களினின்றும் கண்ணீர் வருவானேன்? காரணமென்ன?' என்றாள் மீனா.

'கொள்கைகள் மறைந்து போய்விடுகின்றனவே என்பதினால்தான்' என்று கண்ணீரைத் துடைத்துக் கொண்டு ஸரோஜா கூறினாள்.

'நேற்றையதினம் திரிவிக்ரமன் உங்கள் வீட்டிற்கு வந்திருந்தாரா?'

'இல்லை, காலத்தை அனுசரித்து அவர், பணம் வந்தால்தான் கலியாணம் செய்துகொள்வதென்று நிச்சயித்துவிட்டார்' என்று ஸரோஜா சொல்லிவிட்டு, மறுபடியும் பெருகிக்கொண்டிருக்கும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

'என் அன்புள்ள தோழியே! அழாதே; அத்தகைய சலன புத்தியுடையவர்களைக் குறித்து அழுவதில் பயனில்லை.'

'கஷ்டங்கள் மேலிட்ட சந்தர்ப்பங்களில் அவரைப் போலவே எவரும் சலனபுத்தியுடையவர்கள் ஆவார்களல்லவா?'

'எல்லோரும் அப்படி யிருப்பார்களென்று நினைக்க மாட்டேன். நிற்க, எல்லாம் நலத்திற்கே என்று நாம் கருதுவோமாக! நீ அவரைக்குறித்து வருத்தப்படாமலிருப்பது மேல்'

'இவ்வுலகத்தில் எங்கும் துன்பமே நிறைந்திருக்கிறது.'

'அது நம்முடைய மனோபாவத்தைப் பொறுத்திருக்கிறது.'

அது இன்னும் துக்கமே நிரம்பியதாகக் காணப்படுவதும் உண்டு. நல்ல வேளையாக நம்மைப் பொறுத்தமட்டில் இவ்வுலகம் அதிக துன்பம் நிரம்பியதாகத் தோன்றாமலிருக்கிறது. அதைக்குறித்து நாம் சந்தோஷப்படவேண்டியிருக்கிறது.''

'நீசொல்லுவது ஒரு நல்ல காரணமாக எனக்குத் தோன்றவில்லை.'

பதினெட்டு மாதங்களுக்குப் பின்னர், அவ்விரண்டு பெண்மணிகளும் பள்ளிக்கூடத்திற் பரீக்ஷைகள் முடிந்த பின்னர், விடுமுறை நாட்களுக்கு வேறு ஊருக்குச் செல்வதற்கு முன்பாகச் சந்தித்தனர். அவர்களுடைய படிப்பும் ஒருவாறு முடிவடைந்துவிட்டது.

'என்பிரிய சிநேகிதியே! நீ வேறொருவரைக் கலியாணம் செய்ய ஏற்பாடுசெய்துகொண்டு விட்டாயா?' என்று மீனா கேட்டாள்.

'என்னுடைய தகப்பனாரல்லவா எனக்குக் கணவரை நிச்சயம் செய்தார்?' என்றாள் சரோஜா.

'அவர் எவ்வாறு இருக்கிறார்? அவருடைய கண்கள் கூட ஆழ்ந்த யோசனையைக் குறிப்பித்துக் கொண்டிருக்கின்றனவா?'

'இல்லை; அத்தகைய கண்களையுடையவரைக் குறித்து எனக்கு இனிமேல் கவலையில்லை. என்னுடைய தகப்பனார் இவரை ஆராய்ந்து நிச்சயித்திருக்கிறார்; இவருடைய கண்கள் விசாலமான பார்வையை யுடையவைகளாக இருக்கின்றன.'

'இவர் என்ன உத்தியோகத்திலிருக்கின்ருர்?'

'இவர் டாக்டராயிருக்கின்ருர். இவருடைய பெயர் இராமச்சந்திரர்.'

'வயதென்னவோ?'

'இருபத்துமூன்று.'

'பார்ப்பதற்கு அழகாயிருக்கின்ருரா?'

'அழகென்பது அநேக விஷயங்களைப் பொறுத்திருக்கிறது. ஆனல் அதிக மோசமில்லை.''

'நீ அவரை விரும்புகிருயா?'

'நான் அவரை விரும்புகிறேன். ஆனல் காதல் என்பது நாளடைவில் ஏற்படும்.'

'கலியாணம் எப்போது நடக்கும்?'

'அடுத்த மாதத்தில் நடக்கலாம்; இன்னும் கலியாண தினம் நிச்சயிக்கப்படவில்லை. கூடியசீக்கிரம் முகூர்த்த தினம் நிச்சயிக்கப்படும். அப்போது நான் உனக்கு எழுதுகிறேன். நீ தவருமல் வருவாயென்று நான் நம்புகிறேன்.''

'சந்தேகமில்லாமல் நான்வருவேன். கலியாணகாலங்களில் நடக்கும் கேளிக்கைகளையும், கிடைக்கும் நல்ல சாப்பாட்டையும் விட்டுவிடக்கூடாது. அவர் எவ்விடத்தில் உத்தியோகத்திலிருக்கின்ருர்?'

'அவர் இப்போதுதான் வைத்தியகலாசாலையில் படித்துப் பரீக்ஷையில் தேறியிருக்கின்ருர். சிங்கப்பூரில் ஒரு நல்ல உத்தியோகம் அவருக்குக் கிடைத்திருக்கிறது. கலியாணம் முடிந்தபிறகு என்னையும் கூட்டிக்கொண்டு அங்கே போவதாக அவர் உத்தேசித்திருக்கின்ருர்.'

'ஆகவே நீ சமுத்திரத்தைத் தாண்டிப் போகப்போகின்ருய். நாமிருவரும் பிரிந்து போகப்போகிருேம்.'

'பெண்களின் கதி அவ்வளவுதான். அவர்களுடைய கணவன்மார்கள் எங்கிருக்கின்றனரோ, அங்கே அவர்களும் செல்லவேண்டியதுதான். ஆனால் சிங்கப்பூர் நமக்கு அடுத்த வீடுபோலாகிவிட்டது. நமது தேசம் நமது தேசத்து மக்களுக்கு நல்ல உத்தியோகங்களை அளிக்கும் சக்தியில்லாததாயிருக்கின்றது.'

'அவருக்கு அவ்விடத்தில் என்ன சம்பளம்?'

'மாதம் ஒன்றுக்கு முந்நூறு டாலர்கள் சம்பளம். அதைத் தவிர வாடகையில்லாமல் ஒரு வீடும், உபயோகத்திற்காக ஒரு மோட்டாரும் அவர்கள் கொடுப்பதாக வாக்குறுதி செய்திருக்கின்றார்கள். அதாவது, மாதம் நானூற்று ஐம்பது ரூபாய் சம்பளம் என்று வைத்துக்கொள்வேன். அதைத் தவிர, வீடும் மோட்டாரும் இலவசமாகக் கொடுக்கின்றனர். மேலும் சம்பளம் ரூபாய் ஆயிரத்து ஐந்நூறு ஆகும்வரையில், வருஷம் ஒன்றுக்கு ரூபாய் எழுபத்தைந்து வீதம் உயர்த்தப்படும். எல்லாவற்றையும் உத்தேசித்துப் பார்த்தால் மோசமில்லை யென்று தோன்றுகிறது. உன் உத்தேசமென்ன?'

'நீ நல்ல அதிர்ஷ்டசாலிதான். இதற்குமேல் என்ன வேண்டியிருக்கிறது? என்னையும் கலியாணம் செய்து கொள்வதற்கு இவரைப்போலவே இன்னொரு டாக்டர் இருக்கிறாரா என்று பார்த்துச் சொல் என்று உன்னை நான் கேட்கலாமென்றிருந்தேன். இவ்வளவு சம்பளத்தையும், இலவசமான வீட்டையும், மோட்டாரையும் உடைய ஒரு கணவன்மீது நான் காதல் கொள்வேன் என்பதில் சந்தேகமில்லை' என்று சிரித்துக்கொண்டே மீனா கூறினாள்.

'நான் என்தகப்பனாரிடம் சொல்லி வேறொருவரைப் பார்த்துக் கண்டுபிடிக்கச் சொல்லுகிறேன். ஆனால் இவ

ரைப் போலவே வேறொரு டாக்டரை உண்டுபண்ண முடியும் என்று நினைக்காதே' என்று சரோஜா பதிலளித்தாள்.

'இந்தக் கலியாணம் உன்மனதுக்கிசைந்ததாயிருக்கின்றதா? இது உனக்குச் சந்தோஷத்தை அளிக்கின்றதா?'

'நான் சந்தோஷத்துடன்தான் இருக்கிறேன். இருந்தபோதிலும் ராமச்சந்திரருக்கும், ஆழ்ந்த பார்வையையுடைய கண்கள் இருந்திருந்தால் மிகவும் நன்றாயிருந்திருக்கும் என்று நான்கருதுகிறேன்.'

'எப்பொழுது ஒன்று தவறிப்போய் மற்றொன்று அதற்குப் பதிலாக ஏற்பட்டுவிட்டதோ, அப்போது தவறிப்போனதைக் குறித்து வருந்துவதில் பயனில்லை. யோசனையிலாழ்ந்திருக்கும் குறுகிய கண்களை மறந்துவிடு. விசாலமான பார்வையையுடைய அகன்ற கண்களை விரும்பு.'

சரோஜாவின் முகம் மலர்ந்தது. 'நம்முடைய இத்தகைய சாதாரணமான விருப்பங்களுக்குக் காரணம் கூறுவது கஷ்டம்' என்று அவள் சொன்னாள்.

'இப்போது அந்த ஆழ்ந்த சிந்தனையைக் குறிக்கும் கண்களை யுடையவர் என்ன செய்துகொண்டிருக்கிறார், தெரியுமா?' என்று மீனா கேட்டாள்.

'ஆசாரம் வாய்ந்த குடும்பத்தைச்சேர்ந்த ஒரு பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டார். இரண்டாயிரத்து ஐந்நூறுரூபாய் வரதக்ஷிணையாக அவர் வாங்கிக்கொண்டார். அவருடைய குடும்பத்தின் கடன்களையெல்லாம் தீர்த்துவிட்டு, ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்குப் படிப்பதற்காக உபகாரச் சம்பளத்துடன் அவர் இங்கிலாந்திற்குப் போயிருக்கிறார்.'

'அவருக்கு நல்ல அதிர்ஷ்டம் என்றுதான் தோன்று கிறது.'

' சந்தர்ப்பம் நேரிடவே, அவருடைய கண்கள் விசால மாகிவிட்டன.''

' உன் கணவருடைய அகன்ற கண்கள் காதலின் செயலால், கூடிய சீக்கிரம் ஆழ்ந்த கண்களாக மாறிவிடும்.'

'அவ்வாறு ஆகுமென்றே நாம் நம்புவோமாக! நான் ஓர் அந்தரங்கமான விஷயத்தை உன்னிடம் சொல்லப் போகிறேன். வீரச்செயல்களும், போற்றத் தகுந்த உன்னத மான எண்ணங்களும், இவ்வுலகில் பயனளிப்பதில்லை. நம்முடைய நல்ல எண்ணங்களெல்லாம் பயனற்றுப் போவதை ஒவ்வொருநாளும் நாம் பார்த்துக்கொண்டிருக் கிறோம். நமது எண்ணங்களுக்கும், உலகில் நடக்கும் விஷயங்களுக்கும் சம்பந்தமே யில்லாமலிருக்கின்றது. போற்றத்தக்க கொள்கைகளையெல்லாம் நாளடைவில் நாம் பறக்கவிட்டுவிடவேண்டியதுதான்.'

'அப்படித்தான் நேரிடும். உன்னத எண்ணங்களை வைத்துக்கொண்டு நாம் வயிறு வளர்க்கமுடியாது. கனவு களினுல் நம்முடைய வயிற்றை நிரப்பமுடியாது. அவை களினுல் நாம் வேறு எந்தவிதமான திருப்தியையும் அடைய முடியாது. அதை உத்தேசித்துத்தான் நம்முடைய பெரி யோர்கள் அபினி, கஞ்சா முதலிய லாகிரி வஸ்துக்களை நாம் உபயோகிக்கக் கூடாதென்று தடுத்திருக்கின்றனர். சாதாரணமாகக் காணும் கனவுகளே நமக்குப் போது மானவை. அவற்றுடன் லாகிரி வஸ்துக்களை உபயோகித்து இன்னும் ஏன் கனவுகளை நாமாகவே அதிகப்படுத்திக் கொள்ளவேண்டு மென்பது அவர்கள் கொள்கையாயிருந் தது. சரி, இப்போது எனக்கு நேரமாகிறது. நான்

சீக்கிரம் போகவேண்டும். உன்னுடைய கலியாண முகூர்த்தம் நிச்சயிக்கப்பட்டவுடன் எனக்கெழுது. நான் கண்டிப்பாக நான்குநாள் முன்னதாகவே வந்து, எல்லாவற்றையும் கண்டு களிக்கிறேன்.'

'அப்படியே செய்' என்றாள் சரோஜா.

கலியாணம் மிக்க ஆடம்பரத்துடன் நடந்தது. அவ்வூரிலிருந்த பெரிய மனுஷர்களெல்லாம் அக்கலியாணத்திற்கு வந்திருந்தனர். மீனுவும் வந்திருந்தாள். விருந்துகளெல்லாம் முதல்தரமானவையாக இருந்தன. அத்தகைய விருந்துகள் அதற்கு முன்பு அவ்வூரில் நடந்ததே யில்லையென்று அனைவரும் புகழ்ந்து பேசிக்கொண்டனர். பாட்டுக்கச்சேரிகளுக் கென்று பிரத்தியேகமாக வரவழைக்கப்பட்டிருந்த சங்கீதவித்வான்கள் மிகவும் திறமை வாய்ந்தவர்கள். கலியாணமானபிறகு தங்கள் காலத்தைச் சுகமாகக் கழிப்பதற்கும், வேலையைக் கவனிப்பதற்கும், அந்தத் தம்பதிகள் கப்பலேறிச் சிங்கப்பூருக்குச் சென்றனர்.

சமுத்திரத்திற்கு அருகிலிருந்த பங்களாவும், சிங்கப்பூர் அமைப்பும் சரோஜாவின் மனத்திற்குத் திருப்தியை அளித்தன. 'டாட்ஜ்' மோட்டாரில் ஏறிக்கொண்டு, சிநேகிதர்கள் வீட்டிற்குச் செல்வதிலும், கடைகளுக்குச் சென்று சாமான்களை வாங்கிக்கொண்டு வருவதிலும், சரோஜா காலத்தைச் சந்தோஷமாகக் கழித்துவந்தாள். அவளுடைய அழகையும், அமைதியுடன் கூடிய குணத்தையும், போற்றத் தகுந்த நடத்தையையும் கண்டு அவ்வூரிலுள்ளோர் அனைவரும் அவளுடைய நட்பை நாடினர். ராமச்சந்திருடைய ஆஸ்பத்திரி இரண்டுமைல்களுக்கு அப்பாலிருந்ததால், அவள் அவருடன் ஆஸ்பத்திரிக்குச்

செல்வது வழக்கம். அவருக்குவேண்டிய சிற்றுண்டிகளையும் அவள் அவருக்கு மத்தியானவேளைகளில் கொண்டுபோய்க் கொடுப்பது வழக்கம். சாயங்கால வேளைகளில் போய் அவரை வீட்டிற்கு அழைத்துக்கொண்டு வருவாள். கடற் கரை யோரங்களில் நடக்கும் பலவிதமான காட்சிகளைக் காண அவர்களிருவரும் அடிக்கடி இராத்திரிகாலங் களில்கூட தங்களுடைய மோட்டாரில் சுற்றுவது வழக்க மாயிருந்தது.

அவ்வாறு சந்தோஷத்துடன் அவர்கள் காலத்தைக் கழித்துவந்தனர். காலசக்கரம் அதிவிரைவாகச் சுழன்று கொண்டிருந்தது. அவர்களுக்குக் காலம் போனதே தெரியாமலிருந்தது. முதல் ஐந்து வருஷங்களுக்குக் குழந்தைகளே வேண்டியதில்லை என்று அவர்கள் தீர்மானம் செய்துகொண்டனர். சாதாரணமாக டாக்டர்கள் சொல் வதுபோல ராமச்சந்திரர் அவளிடத்தில் பின்வருமாறு சொன்னர்: 'பிள்ளை பெறுவதற்கு ஏற்ற வயது உனக்கு இன்னும் ஆகவில்லை. நீ மிகவும் சிறியவள் உனக்கு இருபத்தொன்று அல்லது இருபத்திரண்டு வயது ஆனபிறகுதான், நீ பிள்ளைபெறுவதற்குத் தகுதியானவளா வாய். மேலும் காதல்என்னும் செடி கலியாணமான சிலவருஷந்தான் புஷ்பித்துக் கொண்டிருக்கும். பிறகு அது காய்காய்க்க ஆரம்பித்துவிட்டால், சந்தோஷம் முன்பு இருந்ததுபோல இராது. அதாவது கலியாண மாய்க் குழந்தைகளில்லாத சிலவருஷங்களில் காதலர் அநுபவிக்கும் இன்பமே இன்பம். பிறகு அநுபவிக்கும் சுகம் அதைப்போல இருக்கவே இராது.'

'ஆனல் எனக்கு ஒரு குழந்தை வேண்டுமென்று ஆசையாயிருக்கிறதே' என்று அவள் சொன்னள்.

'இந்த ஐந்து வருஷங்களுக்குப் பிறகு உனக்கு எவ்வளவு குழந்தைகள் வேண்டுமோ, அவ்வளவும் பெற்றெடுத்துக்கொள். யௌவனபருவம் மறுபடியும் வாய்ப்பதரிது. ஒவ்வொரு குழந்தையும் கிழத்தனத்தை உண்டாக்குவதற்குக் காரணமாயிருக்கின்றது. ஆகவே கூடியவரையில் நித்யானந்தத்தையும் நாடு. இளமைப் பருவத்திலேயே இன்பத்தை அநுபவித்துவிடு' என்று அவர் சொல்லவே, அவளும் அதற்கிணங்கினள். இம்மாதிரியாக அவர்கள் வாழ்க்கையின் இன்பத்தை அநுபவித்துக் கொண்டிருந்தனர். சில சமயங்களில் அவளுடைய கணவன் வீட்டில் இல்லாதகாலத்து, தனியே வீட்டிலிருப்பது அவளுக்குச் சிறிது கஷ்டமாகத் தோற்றியது. ஒரு குழந்தை யிருந்தால் அதனுடனாவது விளையாடிக்கொண்டு காலத்தைக் கழிக்கலாமென்று அவளுக்குத் தோற்றியதுண்டு. அவள் அதை விரும்பியது முண்டு. அடிக்கடி அவளுடைய சிநேகிதர்களுடைய குழந்தைகளைக் கொண்டு வரும்படிசெய்து, அவைகளுக்குப் பலவிதமான பொருள்களை அவள் கொடுப்பாள்.

நான்கு வருஷங்களுக்குப்பிறகு அவர்களுடைய வாழ்க்கைக்கு இடையூறு நேர்ந்தது. கொடுந்தொத்து வியாதியாகிய க்ஷயரோகத்தினால் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் பல நோயாளிகளுக்கு இரவும் பகலும் சிகிச்சை செய்துவந்ததனால், ராமச்சந்திரரையும் அந்த வியாதி பற்றிக்கொண்டது. முதன்முதலில் அது சாதாரணமாயிருந்தது. வேலையைக் குறைத்துக்கொண்டு, ஆகாரத்தையும் பத்தியமாக வைத்துக்கொண்டால் வியாதி குணமடைந்து விடுமென்று எண்ணினர். ஆனால் அக்கொடிய வியாதியோ, உறுதியாகப் பிடித்துக்கொண்டது. இரண்டு

மாதங்களுக்குள் தம்முடைய ஆஸ்பத்திரியிலேயே ராமச்சந்திரர் படுத்தபடுக்கையாக இருக்கவேண்டியதாயிற்று. அவருக்குச் சகாயமாக வேலைசெய்துகொண்டிருந்த டாக்டர்களே அவருக்கு மருந்து கொடுக்கவேண்டியதாயிற்று. சரோஜா மத்தியானவேளைகளில் அவருக்கு வேண்டிய ஆகாரம் முதலியவைகளைக் கொண்டுபோய்க் கொடுத்துக் கொண்டிருந்தாள்; இராத்திரிமுழுவதும் அவரருகிலேயே இருந்துகொண்டு அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்துவந்தாள். ஆனால் நாளுக்குநாள் வியாதி பலமடைந்து வந்தது. சிங்கப்பூரிலிருந்த ராமதாஸனுடைய சிநேகிதர் ஒருவர், ராமச்சந்திரருடைய நிலைமையைப்பற்றி ராமதாஸனுக்குக் கடிதம் எழுதவே, ராமதாஸ் தம்முடைய மாப்பிள்ளை யிருக்குமிடமாகிய சிங்கப்பூருக்கு வந்து சேர்ந்தார். ராமச்சந்திரருக்கு வியாதிகண்டு ஒருமாத மானவுடனேயே ராமதாஸ் வந்து சேர்ந்துவிட்டார். அவருடைய மனத்திற்கு வருத்தத்தை உண்டுபண்ணாமலிருப்பதற்காக சரோஜா அவ்விஷயத்தைத் தெரியப்படுத்தாமலிருந்தாள்.

சரோஜாவின் துன்பம்நிரம்பிய முகத்தையும், ராமச்சந்திரருடைய நிலைமையையும் கண்டு, ராமதாஸ் அதிக வருத்தமடைந்தார். சரோஜாவும் இரவும் பகலும் சரியானபடி தூங்காததால் இளைத்துப்போயிருந்தாள். ராமதாஸ் தம்முடைய மருமகனை, ஆஸ்பத்திரியில் தனியேகண்டு பேசினார். உடனே தம்முடைய மகளுடன் அவரை இந்தியாவிற்குப் புறப்பட்டு வரும்படி அவர் எடுத்துரைத்தார். 'இது ஒரு நாகரிகமற்ற தேசம். நாம் நமதுதாய் நாட்டிற்குத் திரும்பிச் செல்வோம். நம் தேசத்தின் சீதோஷ்ணநிலையும், இடம் மாறுதலும், உமது வியாதி

யைக் குணப்படுத்தும். மேலும் நம் நாட்டில் சிகிச்சை செய்வதற்குப் பலர் இருக்கின்றார்கள்' என்று ராமதாஸ் சொன்னார்.

'எனக்குச் சிகிச்சை செய்ய சரோஜா ஒருத்தியே போதும்' என்றார் ராமச்சந்திரர்.

'இவ்வாறு இரவும் பகலும் இடைவிடாமல் சிகிச்சை செய்வதற்குப் போதுமான பயிற்சியும் பலமும் அவளுக்கு இல்லை. இப்பொழுதே அவள் இளைத்துப் போய்விட்டாளென்பது உமக்குத் தெரியவில்லையா?'

'நான் இந்தியாவை வெறுக்கிறேன். கௌரவமாக என்னுடைய வாழ்க்கையை நடத்துவதற்குத் தகுதியான உத்தியோகம் எனக்கு அவ்விடத்தில் கிடைக்கவில்லையே. நாம் மிகவும் சாதாரணமனிதர்களைப் போலவே அவ் விடத்தில் வாழவேண்டும். உத்தியோக வேட்டை நம் முடைய தேசத்தில் மிகவும் மும்மரமாக நடந்துவருகின் றது. நானும் சரோஜாவும் இவ்விடத்தில் ராஜபோகத் துடன் சந்தோஷமாக வாழ்ந்துவந்தோம். மறுபடியும் இந்தியாவிற்குத் திரும்பிவர எனக்கு இஷ்டமில்லை. இவ் விடத்தில் கைதேர்ந்த வைத்தியர்கள் இருக்கின்றனர். என க்கு இவ்விடத்தில் எவ்விதத்திலும் குறைவு இல்லை. சிகிச் சை செய்வதற்குப் பலர் தயாராக இருப்பினும், எனக்கு என்னவோ சரோஜாதான் சிகிச்சை செய்யவேண்டுமென்று தோன்றுகிறது. தங்களை யார் இவ்விடத்திற்கு வரும்படி எழுதினார்கள்? தாங்கள் ஏன் இங்கே வந்தீர்கள்? தாங்கள் உடனே திரும்பி இந்தியாவிற்குச் செல்லுங்கள். நான் இப் போது இந்தியாவுக்கு வரமாட்டேன். கையில் பல ஆயிர

ரூபாய்களைச் சேர்த்து வைத்துக் கொண்டபிறகுதான் நான் இந்தியாவிற்கு வருவதாக உத்தேசம். இப்பொழுதோ நான் கொஞ்சம்கூட சேர்த்து வைக்கவில்லை. நான் இப்போது வந்தால் ஜனங்கள் என்னைக் கண்டு பரிகாசம் செய்வார்கள். "சிங்கப்பூருக்குச்சென்று நான்கு வருஷ காலம் உத்தியோகம் செய்துவிட்டுத் திரும்பிவரக்கூடக் கையில் காசில்லாமல், மாமனாருக்கு எழுதிக் கூட்டிக் கொண்டு வரும்படிச் செய்திருக்கிறான்" என்று எல்லோரும் ஏளனம் செய்வார்கள்.'

'அசட்டுத்தனமாகப் பேசாதீர். உடனே இந்தியாவிற்குத் திரும்பி வாரும்.'

'நான் வரவேமாட்டேன்.'

'அப்படியானால் நான் சரோஜாவை என்னுடன் கூட்டிக்கொண்டு போகிறேன். அவள் இவ்விடத்தில் வீட்டில் தனியாக இருந்துகொண்டு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கமுடியாது.'

'தங்களை இங்கே வந்து இந்தியாவுக்குக் கூட்டிக் கொண்டு போகும்படி, சரோஜாவா கடிதம் எழுதினாள்?' என்று மெதுவாக அதிககோபத்துடன் ராமச்சந்திரர் கேட்டார்.

'இல்லை, என்னுடைய சிநேகிதர் ஒருவர் எனக்கு இவ்விஷயத்தை அறிவித்தார்.'

'நல்லது! என்னுடைய அருமை சரோஜா அந்தமாதிரி செய்யமாட்டாளென்று எனக்கு நன்றாகத் தெரியும். இப்பொழுது தாங்கள் இந்தியாவிற்குத் திரும்பிச் செல்லுங்கள். வேண்டுமானால், தங்களுக்கு இவ்விஷயத்தை அறிவித்த சிநேகிதரையும் தங்களுடன் கூட்டிச் செல்லுங்கள்.

என்னையும் சரோஜாவையும் இவ்விடத்திலேயே விட்டுச் செல்லுங்கள்.'

'அது முடியவே முடியாது. நான் சரோஜாவை என்னுடன் கூட்டிக்கொண்டுதான் போகப்போகிறேன். நீர் உம்முடைய நன்மையைக் கவனியாமல்போனாலும் நான் என்னுடைய குமாரியின் நன்மையையாவது கவனிக்க வேண்டாமா?'

'தாங்கள் தங்களுடைய வேலையைக் கவனியுங்கள். சரோஜாவிற்கு எது நன்மையாக இருக்குமென்பது எனக்குத் தெரியும்.'

'தங்களுக்குத் தெரியாது. தங்களுக்குத் தெரிந்திருந்தபோதிலும், தங்களுடைய சுயநலத்தையே தாங்கள் பெரிதாக எண்ணிக்கொள்கிறீர்கள். என் மகளுடைய சௌக்கியத்தைக் குறித்தாவது, தேகஸ்திதியைக் குறித்தாவது தாங்கள் கவலைப்படுவதேயில்லை.'

'தாங்கள் என்ன தைரியத்துடன் அவ்வாறு சொல்கிறீர்கள்? தங்களுக்கு அவ்வளவு துணிச்சலா? சௌக்கியமாக வாழ்ந்துவருபவர்களுடைய குடியைக் கெடுக்கும் பாவியாகத் தாங்கள் தோன்றியிருக்கிறீர்கள். தாங்கள் சந்தோஷத்தைக் கெடுத்துத் துக்கத்தை உண்டுபண்ணுகிறீர்கள். தாங்கள் ஏன் இந்தியாவிலேயே இருந்திருக்கக் கூடாது? ஏன் இவ்விடத்திற்கு வந்தீர்கள்? என்னுடைய மனைவியின் நல்ல மனத்தைக் கெடுத்து, அவளுக்கும் எனக்கும் பகைமையை உண்டாக்கவா இங்கே வந்திருக்கிறீர்கள்? என்னை இந்நிலைமையில் தனியே விட்டுவிட்டுப் பிரிந்துபோகும்படி அவளுக்கு உபதேசம் செய்யவா வந்தீர்கள்?'

'ஏன் இவ்வாறு கோபத்துடன் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?' என்று சொல்லிக்கொண்டே, தன்கணவனுடைய ஆகாரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, சரோஜா அந்த அறைக்குள் வந்தாள்.

'என்னைத் தனியே விட்டுவிட்டு, உன்னைத் தம்முடன் இந்தியாவிற்கு வரும்படி, உன் தகப்பனார் சொல்லுகிறார்' என்றார் ராமச்சந்திரர்.

'அவர் ஏதோ பிதற்றுகிறார். சுத்தப்பொய். அவருக்கு உடம்பு குணமாகும்வரையில், உன்னையும் அவரையும் இந்தியாவிற்குக் கூட்டிக்கொண்டு போகலாமென்று நான் நினைத்தேன். அவர் ஒரே பிடிவாதமாக இந்தியாவிற்கு வரமாட்டேன் என்கிறார். பிறகு நான் உன்னையாவது கூட்டிக்கொண்டுபோகிறேன் என்று சொன்னேன். நீ இவ்விடத்தில் தனிமையாக, மனவருத்தத்துடன் கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பதனால், உன்னுடைய தேகசௌக்கியத்திற்கும் கெடுதல் உண்டாகும். உன்னுடைய தேகசௌக்கியமும் கெட்டுப்போகாமலிருப்பதற்காக நான் அவ்வாறு கூறினேன். உன்னுடைய மனோவியாகுலமும் ஒருவாறு நீங்கும்' என்றார் ராமதாஸ்.

'என் தந்தையே, என்னுடைய கணவருக்கு அருகிலே இருப்பதனால் எனக்கு உண்டாகும் சந்தோஷத்தைப் பற்றிய ஞாபகமே தங்களுக்கு இல்லாமற் போய்விட்டதா? மனைவி எப்பொழுதும் அவளுடைய கணவனிடத்தில் தானிருக்கவேண்டும். அதுவும் அவருக்குக் கஷ்டம் நேரிட்டகாலத்து, அவள் அவசியம் அருகிலிருந்தே தீரவேண்டும். ஆகவே என்னைமாத்திரம் தனியாக இந்தியாவிற்கு அழைத்துப்போகும் எண்ணத்தை அறவே ஒழித்து விடுங்கள்.'

'என் கண்ணே! நீ சொல்வதெல்லாம் போற்றத்தக்க உன்னதமான கொள்கைகள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் உண்மையில், நீ மிகவும் இளைத்திருக்கிறாய். உன் தேகத்தைக் குணப்படுத்திக் கொள்ள, நீ இத்தேசத்தை விட்டு இந்தியாவிற்குச் செல்லுதல்மேல். அந்த மாறுதல் உனக்கு நல்லது' என்றார் இராமச்சந்திரர்.

'அப்படியானால் நாமிருவரும் செல்வோம்.'

'இந்த நிலைமையில் நான் இந்தியாவிற்கு வரமாட்டேன்' என்று ராமச்சந்திரர் சொன்னார்.

'அவருடைய பிடிவாதத்தைப் பார்த்தாயா!' என்று ராமதாஸ் சொன்னார்.

'அடே! துரோகசிந்தை வாய்ந்தவனே! உன்னை நான் வெறுக்கிறேன்' என்று ஈனசுவரத்துடன் இராமச்சந்திரர் கூறினார். அவருக்கு அதிக கோபமுண்டானதால், அவருடைய தேகம் மிக்க பலஹீனமான நிலைமையை அடைந்துவிட்டது. மறுபடியும் இந்தியாவிற்குப் போகும் விஷயத்தைக் குறித்துப் பேசக்கூடாதென்று சரோஜா கண்டிப்பாக ராமதாஸிடம் கூறினாள்.

'அப்படியானால் நான் இவ்வளவு பணத்தைச் செலவுசெய்துகொண்டு இங்கு வந்திருக்கவேண்டியதே இல்லையே' என்று ராமதாஸ் சொன்னார்.

'ஏன் வந்தீர்கள்?' என்றாள் சரோஜா.

இன்னும் இரண்டுவாரங்கள் அவ்விடத்திலேயே இருந்துகொண்டு, எவ்வாறாவது சரோஜாவைத் தம்முடன் அழைத்துக்கொண்டு செல்லவேண்டுமென்று எண்ணிக் ராமதாஸ், அவ்விடத்திலேயே தங்கினார். எப்படியாவது ராமதாஸ் தம்முடைய மனைவியின் சுபாவத்தை மாற்றிவிடுவார் என்று சதா ராமச்சந்திரர் கவலைகொண்

டிருந்தார். அவருடைய மனத்திற்குச் சமாதானம் இல்லாமல் போகவே, அவருடைய வியாதி அதிகமாயிற்று. நாளுக்குநாள் அவர் பலஹீனமடைந்து வந்தார் ராமதாஸ் அவ்விடத்தையடைந்து பதின்மூன்று தினங்கள் கழிந்த பின்னர், இராமச்சந்திரருடைய நிலைமை கவலைக்கிடமாகியது. அவருடைய மரணம் சமீபித்துவிட்டதென்று, அவருக்குச் சிகிச்சைசெய்துகொண்டிருந்த வைத்தியர்கள் கூறினார்கள். இரண்டுநாட்கள் கழித்துச் செல்ல விருந்த ஒரு கப்பலில் இந்தியாவிற்குச் செல்வதென்று தீர்மானித்திருந்த ராமதாஸ், அச்செய்தியைக் கேட்டதும் தம்முடைய பிரயாணத்தை நிறுத்திவிட்டார். அவரும் அவ்விடத்திலேயே இருந்தார்.

'மாமிசம் தின்னும் கழுகு, எவ்வாறு எருமைக்கடாவின் மரணத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்குமோ, அவ்வாறு இவர் என்னுடைய மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டு காத்திருக்கிறார்' என்று ராமச்சந்திரர் சரோஜா தம்மைப் பார்க்கவந்தவுடன், அவளிடம் சொன்னார்.

'என்னுடைய அன்பிற்குகந்தவரே! அவ்வாறு சொல்லாதீர்கள். தாங்கள் இன்னும் அநேக வருஷங்கள் உயிருடனிருப்பீர்கள்' என்று அவள் சொன்னாள்.

'எனக்கு அத்தகைய வீண் எண்ணங்களின்மீது நம்பிக்கை யில்லை. கண்டிப்பாக நான் இன்னும் ஒரு வாரத்தில் இறந்துபோய்விடுவேன். நானும் ஒரு டாக்டரானதால் எனக்கு அது நன்றாகத் தெரியும்' என்று சொல்லிவிட்டு, கண்டோர் பரிதபிக்கும்படி ஓயாமல் அவர் இருமினார். அவருடைய வாயிலிருந்து இரத்தம் வெளியே வந்தது. சரோஜா ஓயாமல் அழத்தொடங்கினாள்.

'என் கண்ணே! நீ அழாதே. நம்முடைய வாழ்க்கையைக் கண்டு பொறாமை கொண்டுள்ள கிரகங்கள், இந்த வியாதியையும் ராமதாஸையும் என்னிடம் அனுப்பியிருக்கின்றன' என்று இருமல் நின்றவுடன் அவர் கூறினார்.

அந்தவாரம் முழுவதும் சரோஜா அதிக மனவருத்தப்பட்டாள். அவளுடைய மனக்கிலேசம் எடுத்துரைக்க முடியாததாயிருந்தது. அவளுடைய கணவரது தேக நிலையோ நாளுக்கு நாள் கேவலமான ஸ்திதியையே அடைந்து தாம் இறப்பது நிச்சயம் என்று டாக்டர்கள் கூறிய பத்துத் தினங்களுக்கெல்லாம், ராமச்சந்திரர் உயிர்துறந்தார்.

நீ என்னுடைய வாழ்க்கையைப் பிரகாசப் படுத்திய சூரியவெளிச்சமே ஆவாய். உன்னைவிட்டுப் பிரிந்துபோக வேண்டியிருக்கிறதென்னும் விஷயமே எனக்கு அதிகத்துயரத்தை உண்டாக்குகிறது. மறுவுலகில் உன்னை நான் எதிர்பார்த்துக்கொண்டிருப்பேன்' என்று சாகுந்தறுவாயில் சொல்லிவிட்டு, ராமச்சந்திரர் உயிர் துறந்தார். வருத்தந் தாங்கமுடியாமல், கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு சரோஜா கீழே விழுந்துவிட்டாள். மாமனாரான ராமதாஸிடம் ராமச்சந்திரர் ஒருவார்த்தை கூடப் பேசவேயில்லை.

ராமச்சந்திரருக்குச் செய்யவேண்டிய கிரியைகள் எல்லாம் முடிந்தபிறகு, ராமதாஸும் சரோஜாவும் சென்னைக்குப் பிரயாணமாயினர். சென்னையில் முதல் முதல் சரோஜா மீனுவைத்தான் பார்த்தாள். தன்னுடைய கஷ்டங்களையெல்லாம் அவள் மீனுவிடம் எடுத்துக் கூறினாள். 'நான் எவ்வாறு உயிருடனிருக்கிறேனென்ப

தற்குக் காரணத்தைச் சொல்ல என்னல் முடியாது. அது எனக்கே விளங்கவில்லை. நானும் இறந்துபோய்விடுவே னென்றே நினைத்தேன். நான் இறந்துபோயிருந்தால் மிகவும் நன்று யிருந்திருக்கும்' என்று சொன்னாள்.

'அது சரியல்ல; அவ்வாறு நடக்காது; அது நல்லது மல்ல! இறந்துபோவதைவிட வாழ்வது எப்போதும் மேலானதென்பதில் சந்தேகமில்லை. மேலும், மனச்சாட்சி என்பது, அத்தகைய மூடத்தனமான தற்கொலைகளைச் செய்யவொட்டாமல் நம்மைத் தடுத்துக்கொண்டே யிருக் கிறது. என்கணவன் அத்தகைய விஷயங்களைக் குறித்துப் பேசுவதை நீ கேட்கவேண்டும்' என்று மீனு சொன்னாள்.

'அவர் ஒரு வக்கீலென்றும், உன்னுடைய மனத்திற் குப் பொருத்தமானவரென்றும் நான் கேள்விப்பட்டேன்' என்றாள் சரோஜா.

'ஆம் அது வாஸ்தவந்தான். கணவனையிழந்த ஓர் இளம்பெண்ணும், மனைவியையிழந்த ஒரு வாலிபனும் இறந்துபோனவர்களுக்குச் செய்யவேண்டிய கிரியைகள் முடிந்தவுடனேயே மறுவிவாகம் செய்துகொள்ளவேண்டு மென்று அவர் முன்னொருநாள் சொன்னார். "ஆர்மோனி யம் என்னும் ஒரு கருவி உடைந்து துண்டுதுண்டாகப் போய்விட்டால், உடனே நாம் வேறோர் ஆர்மோனியத்தை வாங்கிக்கொள்ளுகிறோம். அதேமாதிரியாக இந்த மனித ஆர்மோனியம் என்னும் கணவன் மனைவி இருவர்களில், மரணத்தினல் ஒருவர் பிரிந்துவிட்டால் நாம் அவ்வாறு நடந்துகொள்ளாமல், ஏன் வேறு விதமாக நடந்து கொள்ளவேண்டும்?" என்று அவர் கூறினர்' என்றாள்.

தன்னை மீனு யறிந்து கொள்ளாதவாறு சரோஜா சிரித்தாள். 'அவர் முழுவதும் இவ்வுலகப்பற்றுடையவ ரென்று தோன்றுகிறது' என்று சரோஜா சொன்னாள்.

'அவர் அப்படித்தானிருக்கிறார். நமக்கு மேலிருப்பது ஆகாயமோ என்னவோ என்னும் சந்தேகம் அவருக்கு உண்டானால், அவருடைய வழக்குக்களெல்லாம் தோல்வியடைந்துவிடும் என்று அவர் என்னிடம் ஒருநாள் சொன்னார். அதனால் அவருடைய வருவாயும் குறைந்துவிடும் என்று அவர் எடுத்துரைத்தார்' என்றாள் மீனு.

'எப்படி யிருப்பினும் என் வாழ்நாட்களை விதவையாகவே கழித்துவிடுவதென்று நான் தீர்மானித்துவிட்டேன். முன்னமேயே நான் அவ்வாறு உன்னிடம் சொல்லி யிருப்பது உனக்கு ஞாபகமில்லையா?' என்று சரோஜா கேட்டாள்.

'ஐயோ! எனக்கு அது ஞாபகமிருக்கிறது. நீ இவ்வளவு சீக்கிரத்தில் விதவையாய்விடுவாயென்று நான் எண்ணவே யில்லை. நீயோ இளம்பெண்ணாயிருக்கிறாய்; அழகாயிருக்கிறாய்; உனக்கோ குழந்தைகளுமில்லை; விமலா செய்துகொண்டதுபோல நீயும் மறுவிவாகம் செய்து கொள்ளத்தான் வேண்டும்' என்றாள் மீனு.

'அது முடியவே முடியாது. என்னுடைய கணவர் மீது எனக்கிருக்கும் ஆசை, என்னை அவ்வாறு செய்ய ஒட்டாது' என்றாள் சரோஜா.

* * *

'மீனு! உன்னுடைய நல்லபோதனைகளெல்லாம், யாதொரு பயனுமில்லாமல் போகின்றன. இவள் எப்பொழுதும், இறந்துபோன இவளுடைய கணவனது

புகைப்படத்தை வைத்துப் பூஜித்துக்கொண்டிருக்கிறாள். அதற்குத் தினந்தோறும் மாலைகளைச் சாத்திப் போற்றிக் கொண்டிருக்கிறாள். அவ்வாறு பூஜிப்பதற்குரிய நல்லெண்ணங்கள் எனக்குத் தெரிந்தவரையில், அவரிடம் ஒன்று கூட இருந்ததில்லை' என்று ராமதாஸ் மீனாவைத் தனியே அழைத்துச்சென்று அவளிடம் கூறினார்.

'இன்னும் இரண்டு வருஷங்களுக்குள் இவைகளெல்லாம் மறைந்துபோய்விடும். உலக விஷயங்களை அதிகமாக அவள் அறிந்துகொள்வாள். அப்போது அடையக்கூடிய இன்பம் அவளுடைய கைக்குள் இருக்கிறதென்பதையும் அவள் அறிவாள். அப்போது அப்புகைப்படம் இருந்த இடம் தெரியாமல் போய்விடும்' என்று மீனா சொன்னாள்.

'இப்பொழுது அவள் விஷயத்தில் நான் என்ன செய்வது?'

'அடுத்த மாதத்தில் நாகப்பூரில் "அகில இந்திய மாதர்கள்கூட்டம்" ஒன்று நடக்கப்போகிறது. அக்கூட்டத்திற்கு நான் அவளை என்னுடன் அழைத்துச் செல்கிறேன். அக்கூட்டம் அவளுடைய கனவுகள் பலவற்றைப் போக்கடித்துவிடும். நாங்கள் திரும்பி வந்தபிறகு அவளைச் சர்வகலாசாலைக்கு அனுப்பிப் படிக்கும்படி செய்துவிடுங்கள்.'

ராமதாஸ் அதற்கிசைந்தார். அவருடைய வந்தனத்தையும் அவளுக்கு அளித்தார்.

நாகப்பூரில் நடக்கும் மகாசபைக்குச் சரோஜாவைத் தன்னுடன் வரும்படியாக மீனா செய்தாள். ஆனால் சரோஜாவை இணங்கும்படி செய்வது மீனாவுக்கு அதிகக் கஷ்டமாயிருந்தது. நாகப்பூரை அடைந்ததும் சரோஜா அதிக

ஊக்கத்துடன் வேலைசெய்ய ஆரம்பித்தாள். அவ்விடத்தில் நடந்த கூட்டங்களில் அவள் கலந்துகொண்டாள். அவ்விடத்தில் பேச எடுத்துக்கொள்ளப்பட்ட பலமுக்கியமான விஷயங்களில் 'விதவைகள் மறுவிவாகம்' என்பதும் ஒன்றாயிருந்தது. அதிகக் கீர்த்தியும் புகழும் வாய்ந்த பல இந்தியப் பெண்மணிகள், 'விதவைகள் மறுவிவாகம் செய்து கொள்ளத்தான் வேண்டும்' என்று வற்புறுத்திப் பேசினார்கள். மனைவிகளை இழந்த கணவன்மார்கள் எப்படி உடனே மறுவிவாகம் செய்துகொள்கிறார்களோ, அதே மாதிரி, கணவனை இழந்த விதவைகள் சாதாரணமாய், யாதொரு தடையுமின்றி, உடனே மறுவிவாகம் யதேச்சையாய்ச் செய்துகொள்ளும் காலம் வந்தால்தான் நம்தேசம் முன்னேற்றமடையும் என்று கண்டிப்பாகக் கூறினார்கள். அப்பெண்மணிகளிடத்துச் சரோஜாவிற்கு அதிக விசுவாசம் இருந்தது.

'மனைவிகளை இழந்த கணவர்களையும் மறுவிவாகம் செய்து கொள்ளக் கூடாதென்று நாம் தடுத்தல் மேலென்று எனக்குத் தோன்றுகிறது' என்றாள் சரோஜா.

'ஒரு கால் யானைக்காலா யிருப்பதே போதுமானது. மறு காலிற்கும் அதை ஏன் வருவித்துக்கொள்ள வேண்டும்?' என்று அச்சபைக்கு வந்திருந்த ஒரு பெண் மணி சுருக்கமாகப் பதிலளித்தாள்.

'தாங்கள் கூறியதைத் தயைசெய்து விளக்கிச் சொல்லுங்கள்' என்று சரோஜா கேட்டாள்.

'நான் சொன்னதாவது: இந்த வியாதி ஒரு காலைப் பற்றி யிருக்கிறது. அவ்வாறிருக்கும்போதே, அதிக கஷ்டத்தை யுண்டுபண்ணிக்கொண்டிருக்கிறது. அதாவது

கலியாணமாகாத விதவைகள்—பிரயோஜன மற்றவர்கள், அதிக எண்ணிக்கையுடைய பெரிய கூட்டம், நமது தேசத்தின் முன்னேற்றத்திற்குத் தடையாயிருப் பவர்கள் —எவ்வளவு கஷ்டத்தைக் கொடுக்கக் கூடுமோ அவ்வளவு கஷ்டத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் விதவைகளா யிருப்பதனால் யாதொரு சௌக்கியத்தையும் அடைவதில்லை. அவர்களால் தேசத்திற்கும் சௌக்கிய மில்லை. அவ்வாறிருக்கும்போது அந்த வியாதி மற்றொரு காலுக்கும் தொடரும்படி ஏன் செய்யவேண்டும்?'

சரோஜா மௌனமாயிருக்க வேண்டியதாயிற்று. அவ ளுடைய கொள்கைகளெல்லாம், மேலேயிருந்து கீழே ஒவ்வொன்றாகத் தள்ளப்பட்டுக்கொண்டிருப்பதை அவள் கண்டாள். மிகவும் உன்னதமானவையாகக் கருதப்பட்ட கொள்கைகளெல்லாம், வெறுக்கத்தகுந்த வியாதிக ளென்று எடுத்துக்காட்டப்பட்டன. பழைய பழக்கவழக் கங்கள்—அழகிய, போற்றத்தகுந்த, கையாளக்கூடிய— நல்ல வழக்கங்களென்று அவளுக்குத் தோன்றிக்கொண் டிருந்தவைகளெல்லாம் சிறிதுசிறிதாக வெறுக்கத்தகுந்த வியாதிகளாக அவளுக்குத் தோன்ற ஆரம்பித்தன. அங்கு வந்திருந்த வேறொரு பெண்மணியிடம் அவள் தனித்துப் பேச நேர்ந்தது. ஒன்பதாவது வயதில் அப்பெண்ணி னுடைய கணவன் இறந்துபோய்விட்டதனால் அவள் விதவையானா ளென்றும், பிறகு இருபத்தைந்தாம் வயதில் அப்பெண் மறுவிவாகம் செய்துகொண்டா ளென்றும், சரோஜா அப்பெண்ணினிடமிருந்து அறிந்துகொண்டாள். அவ்விஷயம் அவள் மனத்திலிருந்த சிறு சந்தேகத்தையும் நீக்கிவிட்டது.

'இந்தச் சபையில் பேசப்படும் விஷயங்களில், உன்னத மான கொள்கைகளுக்கு இடமே யில்லை. இவ்வுலக அநு பவம் அதிகமாக இருக்கும் சீமாட்டிகள் கூடியிருக்கும் இந்தச் சபைக்கு வந்ததுமுதல் என்னுடைய எண்ணங்க ளும், கொள்கைகளும், பஞ்சாய்ப் பறந்துபோய்க்கொண் டிருக்கின்றன' என்று சரோஜா மீனுவிடம் சொன்னாள்.

'உதாரணமாக?' என்று மீனு கேட்டாள். மீனுவுக்கு அங்கு நடந்த விவாதங்களைக் குறித்து நன்றாகத் தெரியும். வேண்டுமென்றே அவ்விஷயங்களைக் குறித்துப் பேசும்படி தூண்டியவள் மீனுவே யாவாள். சரோஜாவின் மனத்தைத் திருப்பவேண்டும் என்னும் எண்ணத்துட னேயே மீனு அந்த ஏற்பாடுகளைச் செய்திருந்தாள்.

'நான் விதவையாகத்தான் என் வாழ்நாட்களைக் கழிக்கப் போகிறேன் என்று முன்பு நான் எவ்வளவு கண்டிப்பாகச் சொல்லிக்கொண்டிருந்தேனோ, அவ்வளவு கண்டிப்பாக நான் இப்போது சொல்லமாட்டேன்' என் றாள் சரோஜா.

'தேசத்தை முன்னேற்றமடையும்படி செய்து காலத் திற்கும், நாகரிகத்திற்கும் தக்கபடி நட. ஒரு நல்ல கணவனைத் தேர்ந்தெடுத்துக் கலியாணம் செய்துகொண்டு, நல்ல திடகாத்திரமுள்ள குழந்தைகளைப் பெற்றுக் கொள். உன்னுடைய கிழப்பருவத்தில் அக்குழந்தைகளே உனக்குச் சந்தோஷத்தை யளிக்கக் கூடியவர்கள் என்பதை நம்பு' என்று மீனு கூறினாள்.

சரோஜாவின் முகம் மலர்ந்தது.

'நான் வேடிக்கையாகச் சொல்லுகிறேன் என்று நினையாதே. நான் உன்னுடைய நன்மையை உத்தேசித்தே சொல்கிறேன்' என்று மீனு மறுபடியும் சொன்னாள்."

'ஆனால் ஒரு விதவையின்மீது காதல் கொண்டு அவளைக் கலியாணம் செய்துகொள்ள யார் முன்வருவார்கள்?' என்று சரோஜா கேட்டாள்.

'நீ மறுவிவாகம் செய்துகொள்ளப் போகிறாய் என்று தெரிந்தால் போதுமானது; கலியாணம் செய்துகொள்ளத் தக்க பருவம் வாய்ந்த வாலிபர்கள், 'நான் முன்பு,' 'நான் முன்பு' என்று போட்டிபோட்டுக்கொண்டு உன்னையடையத்திரள் திரளாக வருவார்கள்' என்று மீனு சொன்னதைக் கேட்டு, சரோஜாவின் முகம் மறுபடியும் மலர்ந்தது.

அச்சபையிலிருந்து திரும்பிவந்தபிறகு, சரோஜா உயர்தரக் கலாசாலையில் சேர்ந்து படிக்கத் தொடங்கினாள். கணவனுடைய புகைப்படத்தைப் பூஜிப்பதை அவள் நிறுத்திவிட்டாள். இவ்வுலகமே அவளுடைய கண்களுக்கு ஒரு புதிய உலகமாகத் தோன்றியது. அவளுடைய எண்ணங்கள் முற்றிலும் மாறுதலடைந்துவிட்டன. அதற்கு முன்பு எல்லாம் அவளுடைய கண்களுக்கு இருள் சூழ்ந்தவைகளாகக் காணப்பட்டுவந்தன. அப்பொழுதோ, எல்லா வஸ்துக்களும் சந்தோஷத்துட னிருப்பவைபோல அவளுக்குத் தோன்றின. அவள் மனத்தில் சந்தோஷமே குடிகொண்டிருந்தது. அவள் மனது இனிய சங்கீதத்தை நாடியது; காதலுக்கு இடந் தந்தது. 'ஆசையும் நேசமும் ஆனந்தமும் அங்கே' (அவள் மனத்திலே) குடிகொண்டிருந்தன. 'பேசலும் பாசமும், பிதற்றலும்' பறந்தோடிப் போயின. அந்த நிலைமையில் இருக்கும்போது, உயர்தரக் கலாசாலைப் பிரசங்கியாராயிருந்த நரசிம்மம் என்னும் ஒரு

வாலிபர்மீது அவள் காதல் கொண்டாள். அவரும், வரம்புமீறி அவளிடத்தில் மோகங் கொண்டார். தம்மைக் கலியாணம் செய்துகொள்ள அவளுக்கு இஷ்டமா என்று அவர் அவளைக் கேட்டார்.

'உண்மையில் தாங்கள் என்மீது ஆசைகொள்ளும் பக்ஷத்தில் எனக்கு யாதொரு ஆக்ஷேபமுமில்லை' என்று அவள் சொன்னாள்.

'எனக்கு உன்மீது அதிக ஆசையிருக்கிறது. நான் அவ்வாறு தெய்வத்தின்மீது ஆணையாகச் சத்தியம் செய்கிறேன்' என்றார் அவர். அன்றைய தினமே அவள் ராமதாஸிடம் சென்று நடந்தவைகளைக்கூறி, அவருடைய அனுமதியை வேண்டினாள்.

'அந்த வாலிபன் மாதம் ஒன்றுக்குத் தொண்ணூறு ரூபாய்தான் சம்பாதிக்கிறான். மாதம் முந்நூறு ரூபாய்களாவது சம்பாதிக்காத ஒருவனுக்கு நான் உன்னைக் கலியாணம் செய்துகொடுக்க மாட்டேன்' என்றார் ராமதாஸ்.

'என் தந்தையே! நான் வான்மலரை நினைத்துக் கொண்டிருந்த காலமெல்லாம் போய்விட்டது. கனவுகளின்மீது எனக்கிருந்த நம்பிக்கை ஒழிந்துபோய்விட்டது. நிதர்சனமாக நடக்கக்கூடியவைகளின்மீதே நான் நம்பிக்கை வைத்திருக்கிறேன். நமது இந்து சமூகத்தில், ஒரு வாலிபன், ஒரு விதவையைக் கலியாணம் செய்து கொள்ளுகிறேனென்று முன்வருவதே அரிது. அது அவ்வாறு அரிதாயிருப்பதால்தான், விதவைகள் அவர்களுடைய வாழ்நாட்களுக்குள், மறுவிவாகம் செய்துகொள்வதே அரிதாக இருக்கின்றது. அவ்வாறு நடந்தால் அதை நாம் ஓர் ஆச்சர்யமாகக் கருதவேண்டும். எனக்கு மாதம் ஒன்றுக்குத்

தொண்ணூறு ரூபாய் போதுமானது. என்னுடைய காதலர் முந்நூறுரூபாய் சம்பாதிக்கும் வரையில் நான் காத்திருக்கக் கூடிய நிலைமையில் இப்போது இல்லை. அவ்வாறு சம்பாதிக்கத் தொடங்குவதற்குள் என்னுடைய காதலர் தம்முடைய எண்ணத்தை மாற்றிக்கொண்டாலும் மாற்றிக்கொள்ளக்கூடும் ; அவருடைய கனவுகளும் அவரைவிட்டு அகன்று போய்விட்டாலும் போய்விடக் கூடும். ஆகவே இப்போதே எனக்கு விடையளிப்பீராக; 'சரி' என்று சொல்லுங்கள்' என்றாள் சரோஜா.

அவ்வாறு சரோஜா சொல்லவே, 'சரி' என்று ராமதாஸ் சொன்னார்.

அடுத்தவாரம் கலியாணம் நடந்தது. 'நல்லவேளையாக நமது தேசத்தின் க்ஷேமத்திற்கு அறிகுறியாக, வான் மலர்கள் நாளுக்கு நாள் மறைந்துபோய்க்கொண்டிருக்கின்றன' என்று மிரளமிரள விழித்துக்கொண்டிருக்கும் விமலாவிடம் அந்தக் கலியாணம் முடிந்தவுடன் மீனா சொன்னாள்.

# 3. துன்பங்கள் கலத்தல்

சிலருக்கு இவ்வுலகம் எப்பொழுதும் இன்பமய மாகவே தோற்றுகிறது. பொங்கி எழும் ஆனந்தத்தை அவர்கள் அடக்க முடியாதவர்களாய் இருக்கின்றனர். காரிருளை ஒத்த மேகத்திலுங்கூட அவர்கள் சூரிய கிரணங்களைக் காண்கின்றனர். கரியைப் போன்றும் மையைப் போன்றும் இருள் சூழ்ந்திருக்கும் நள்ளிர விலுங்கூட அவர்கள் பகல் வெளிச்சத்தைக் காண் கின்றனர். துன்பம் சாகரம் போன்றிருப்பினும், அவர்கள் அச்சாகரத்தின் மத்தியில் சந்தோஷம் என்னும் குமிழி களைப் பார்க்கின்றனர். என்னுடைய சிநேகிதன் மது ஸூதனன் என்பவனும் அவர்களில் ஒருவனுவான். ஒரு நாள் மாலை, நானும் அவனும் அதிக வனப்புவாய்ந்த சென்னையின் கடற்கரையோரமாகச் சென்றுகொண்டிருந் தோம். சேன்தோமிற்கும், பிரஸிடென்ஸி காலேஜிற்கும் மத்தியிலுள்ள பிரதேசத்தில், நாங்கள் பல விஷயங் களைக் குறித்துப் பேசிக்கொண்டே உலாவிக்கொண்டிருந் தோம். மிக அழகிய கட்டிடங்களுடன் கூடிய மேரி ராணி கல்லூரியின் அருகில் நாங்கள் சென்றுகொண்டிருந்த போது, என்னுடைய சிநேகிதன் பேச்சின் இடையில்,

---

ஸ்ரீமான் கே. எஸ். வேங்கடசுப்பையர், பி. ஏ., எல். டி. அவர்கள் மொழிபெயர்த்தது.

'துன்பங்கள் இணைந்தால், அவை இரண்டறக் கலந்து இன்பமாக மாறிவிடும்' என்று சொன்னான்.

'நீ சொல்வது நியாயத்திற்கு விரோதமானதாக இருக்கிறது. அத்தகைய அசட்டுத்தனமான வார்த்தைகளை என்னிடம் சொல்வதில் பயனில்லை. நான் அவைகளை நம்பவேமாட்டேன்' என்றேன் நான்.

'நான் கூறிய சொற்கள் உண்மையென்று நிலைநாட்ட உண்மையாக நடந்த விஷயம் ஒன்றிருக்கிறது. அவ்விஷயத்தைக்கொண்டு நான் சொன்ன வார்த்தைகளை ருஜுப்படுத்த முடியும். அவ்விஷயங்கள் உன்னை நம்பும்படி செய்யும்' என்றான் என் சிநேகிதன்.

'அப்படியானால் உன்னுடைய வார்த்தைகளின் உண்மையை விளக்கக்கூடிய விஷயங்களைச் சொல் பார்க்கலாம்' என்று சிறிது ஆச்சரியமடைந்தவனாய் நான் கேட்டேன்.

அவன் அக்கல்லூரி இருந்த பக்கத்தைச் சுட்டிக் காட்டி, 'அதோ தெரிகிறதே, அக்கட்டிடங்களை நீ பார்த்திருக்கின்றனையா?' என்று என்னைக் கேட்டான்.

'ஆம், அக்கட்டிடங்களை நான் பார்த்திருக்கிறேன். அக்கட்டிடங்களுக்கும் நீ கூறப்போகும் விஷயத்திற்கும் என்ன சம்பந்தம்?' என்று நான் கேட்டேன்.

'நான் சொல்வதைக் கவனித்துக் கேள். பிறகு என் வார்த்தையில் உனக்கு நம்பிக்கை ஏற்படும். நான் சொல்லப்போகும் விஷயங்கள், சென்ற வியாழக்கிழமை அக்கட்டிடத்தில்தான் நடைபெற்றன. அவைகளே என்னுடைய கொள்கையை ருஜுப்படுத்தப்போகின்றன' என்று என் சிநேகிதன் கூறினான்.

'அப்படியானால் அவைகளைச் சொல் பார்க்கலாம்' என்று நான் கூறினேன்.

'சரி, சொல்கிறேன், கேள்: அக்கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும் பெண்களைப் பார்த்துப் பேசுவதற்காக வருபவர்களுக்கென்று அமைக்கப்பட்டிருந்த ஒரு தாழ்வாரத்தில், சென்ற வியாழக்கிழமை சாயங்காலம் நால்வர் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தனர். கமலா என்னும் பெண்ணும், அவளுடைய தாயாராகிய செல்லம்மாள் என்பவளும் தனித்து வேறொரு பக்கத்தில் ஏதோ பேசிக்கொண்டிருந்தனர். அத்தாழ்வாரத்தில் மேற்கூறிய நால்வரைத் தவிர வேறொருவரும் இல்லை. அப்பெண்களின் படிப்பு, கல்லூரியில் அவர்கள் வாழ்ந்துவந்த வாழ்க்கை, இன்னும் இவை போன்ற பல விஷயங்களைக் குறித்து அப்பெற்றோர்கள் அப்பெண்களுடன் பேசிக் கொண்டிருந்தனர். அதேமாதிரியாக அவர்கள் அதற்கு முன்பு நான்கு தடவைகள் சந்தித்திருக்கின்றனர். அன்றைய தினமும், அடிக்கடி, அப்பெற்றோர்கள் ஒருவரை ஒருவர் கடைக்கண்ணினால் பார்த்துக்கொண்டிருந்தனர். அதற்கு முன்பு சந்தித்த நான்கு தடவைகளிலும், அவர்கள் அவ்வாறே மின்னற்கொடி போன்ற பார்வைகளினால் மாறிமாறிப் பார்த்துவந்ததுண்டு. செல்லம்மாள் என்பவளுக்குச் சுமார் முப்பத்திரண்டு வயது இருக்கலாம். அவளுடைய முகத்தில் துன்பம் நிரம்பியிருந்த போதிலும், அவள் அழகுவாய்ந்தவளாகவே காணப்பட்டாள். சுப்பராவுக்கு அவளைவிடப் பத்துவயது அதிகமாயிருக்கும். விசனத்தையும், கவலையையும், அசௌக்கியத்தையும் காட்டக்கூடிய அடையாளங்களாகிய சுருக்கங்கள் அவருடைய நெற்றியிற் காணப்பட்டன. கமலா

வுக்குப் பதினெட்டு வயதிருக்கும். காந்தாவிற்குப் பதினன்கு வயதாகியிருந்தது. அவர்களிருவரும் பிராண சிநேகிதிகளாக இருந்தனர். அவ்விடத்திலிருந்து சுமார் ஒரு பர்லாங்கு தூரத்திலிருந்த வங்காளக்குடாக்கடலின் தோற்றமானது இரத்தினங்களில் சிரேஷ்டமான நீலக் கல்லின் நிறத்தை ஒத்திருந்தது. அத்தோற்றம் அவர்க ளுடைய பார்வைக்கு எதிராக இருந்தது.

அவர்களுடைய விஷயங்களைக் குறித்துப் பேசிமுடிந்த பிறகு, செல்லம்மாள் தன் மகளைப் பார்த்து, 'என் கண்ணே! நமக்கெதிரில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருப் பவர்கள் யார்? நான் இங்கு வரும்போதெல்லாம் அவர் களையும் பார்க்கிறேன்' என்று கேட்டாள்.

'அவள் என்னுடைய ஆப்த சிநேகிதையாகிய கமலா என்பவள். அவளுடன் பேசிக்கொண்டிருப்பவர் அவளு டைய தந்தையாகிய சுப்பராவ் என்பவர்' என்று காந்தி சொன்னுள்.

'கமலா என்பவளுடைய தாயார் உயிருடனிருக் கின்ருளா?'

'இல்லை. அவள் இறந்து போய்ப் பன்னிரண்டு வருடங்களாகின்றன. அவள் இறந்த பிறகு சுப்பராவ் விவாகமே செய்துகொள்ளவில்லை. தனியாக வாழ்வதும் அவருக்குக் கஷ்டமாக இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அவருக்குப் பொழுதுபோவதில்லையாம்; அதற்காகத்தான் அடிக்கடி அவர் இங்கே வந்துபோய்க்கொண்டிருக் கிருர்.'

'அவர் ஏன் மறுபடியும் கலியாணம் செய்து கொள்ள வில்லை?'

'அவர் சில க்ட்டுப்பாடுகளையும் கொள்கைகளையும் உடையவர். ஒருகால் கலியாணம் செய்துகொள்வதாக இருந்தால் காலஞ்சென்ற தம்முடைய மனைவியைப் போன்ற நடத்தை யுடையவளைத்தான் கலியாணம் செய்து கொள்வதென்று அவர் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது.'

'அவர்களுடைய மண வாழ்க்கை எவ்வாறிருந்தது? அதைக் குறித்து எப்பொழுதாவது கமலா உன்னிடம் சொல்லியிருக்கிறாளா?'

'பலதடவைகள் என்னிடம் சொல்லியிருக்கிறாள். அவள் அதைக் குறித்துப் பலமுறை சொன்னதையே சொல்லிக்கொண்டிருந்ததால், நான் இனிமேல் அதைக் குறித்து என்னிடம் பேசவேண்டாமென்று அவளிடம் சொல்லியிருக்கிறேன். அவைகளைக் கேட்டுக்கேட்டு என் காது ஒட்டையாய்ப் போய்விட்டது.'

'ஏன்? அவ்விஷயம் கேட்பதற்கு அவ்வளவு கடூரமாக இருந்ததா, என்ன?'

'இல்லை. கேட்பதற்கு நன்றாகத்தான் இருந்தது. மிகவும் சுவாரஸ்யம் பொருந்தியதாயுமிருந்தது. அராபிக் கதைகளும், பத்தாவது தடவை படிக்கும்போது சுவையற்றவைகளாகத்தான் போய்விடுகின்றன.'

'அவர்களுடைய கலியாணத்தைக் குறித்தும் வாழ்க்கையைக் குறித்தும் முடிவைக் குறித்தும் சொல்; நான் கேட்கிறேன்' என்றாள் செல்லம்மாள்.

காந்தி பின்வருமாறு சொல்ல ஆரம்பித்தாள்:—

'ஜனசமூகவிஷயங்களில், பொதுவாகப் பழைய வழக்கங்களையும் ஆசாரங்களையும் பொறுத்தமட்டில்,

சுப்பராவ் தம் இஷ்டப்படி நடந்துகொள்ளும் சுபாவ முடையவரா யிருந்தார். அவர் அவ்வழக்கங்களைக் கண் மூடித்தனமாக அநுரிஸப்பவரல்லர். நமது சமுதாயங் களில் நடக்கும் கலியாணங்களை அவர் முற்றிலும் வெறுத்தார். கலியாணங்கள் அவ்வாறு நடப்பது சரியல்ல என்பது அவருடைய கருத்து. தங்களுடைய சொந்த முயற்சியாலேயே, கணவனையாவது, மனைவியையாவது தேடிக்கொள்ளச் சக்தியற்றவர்களுக்கு நம்முடைய வழக்கப்படிக் கணவனையோ மனைவியையோ பெரியவர்கள் நிச்சயிக்கின்றனர். அத்தகைய மனிதர்களைப் பொறுத்த மட்டில் அவ்வழக்கம் அவர்களுக்கு உபயோகமாக இருக்கின்றது. ஆனால் தங்கள் இஷ்டப்படி தங்களுடைய மனத்துக்கிசைந்து தங்களுக்கு இன்பத்தையும் திருப்தி யையும் அளிக்கக்கூடியவர்களைச் சிலர் வாழ்க்கைத் துணைவர்களாகத் தெரிந்து எடுத்துக்கொண்டு கலியாணஞ் செய்துகொள்ளலாமென்றால், அதற்கு நம்முடைய வழக்கங்கள் இடங்கொடுப்பதில்லை. தேக சௌக்கிய மில்லாதவர்களையும், பகுத்தறியும் சக்தி இல்லாதவர் களையும், மனோநிலை முற்றிலும் மாறாக இருப்பவர்களையும் அவர்கள் கலியாணஞ் செய்துகொள்ளுமாறு நம்முடைய வழக்கங்கள் அவர்களைக் கட்டுப்படுத்துகின்றன.'

'நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை; அவைகளை விவரித்துச் சொல்' என்று செல்லம்மாள் கேட்டாள்.

'தேக சௌக்கியமில்லாதவர்கள் என்பது ஊமை யாகவும் செவிடாகவும் குருடாகவும் இருக்கும் பல வாலிபர்களையும் பெண்களையும் குறிக்கிறது. சில சமயங் களில், அவர்களுக்கு இஷ்டமில்லாமலிருப்பினும் அத்த கைய கூன் குருடு செவிடு முதலிய வெறுக்கத்தக்க

குறைவுகளுடன் கூடியவர்களைச் சிலர் கட்டாயத்தின் பேரில் கலியாணம் செய்துகொள்ளவேண்டி நேரிடுகிறது. சிலர் மணவாழ்க்கையின் இன்பத்தை அநுபவிப்பதற்குப் போதிய தேகசக்தி யில்லாதவர்களாயு மிருக்கின்றனர். நான் சொல்வது தங்களுக்கு விளங்குகிறதென்று நினைக்கிறேன். நம்முடைய வீட்டில் இருக்கும் 'காமசாஸ்திரம்' என்னும் புத்தகத்தில்....'

'ஆம்! ஆம்? எனக்கு விளங்குகிறது' என்று செல்லம்மாள் அவசரத்துடன் கூறினாள்.

'அறிவில்லாதவர்கள் என்பது, பலவிஷயங்களில் அபிப்பிராய பேதங்களை எப்போதும் கொண்டுள்ள இரண்டுபேர்களைக் குறிக்கின்றது. அதிகமாகக் கற்றறிந்த ஒருவர் தற்குறியான ஒருவரை வாழ்க்கைத்துணையாகக் கொள்வது; பகுத்தறியும் தன்மைவாய்ந்த புத்திசாலியான ஒருவர், கட்டாயத்தின்பேரில், மூடத்தனமும் அறியாமையும் வாய்ந்த ஒருவருடன் பிணைக்கப்படுவது; எவ்விஷயத்திலும் ஒரே மனப்பான்மையில்லாத, பேதமான எண்ணங்களைக்கொண்டிருக்கும் இருவரை ஒற்றுமையுடன் வாழவேண்டும் என்று கலியாணம் என்னும் சடங்கினால் கணவனும் மனைவியுமாக மற்றவர்கள் செய்துவிடுவது—மேற்கூறிய பலவகைக் கலியாணங்கள் நடைபெறுவதை நாம் காண்கிறோம். அவைகளை எல்லாம் ஒரு வகுப்பாகச் சேர்க்கலாம். மனோநிலை வேறுபட்டிருக்கும் வகுப்பில் பின்னே சொல்லும் கலியாணங்களைச் சேர்க்கவேண்டியிருக்கின்றது. எப்பொழுதும் சந்தோஷகரமாகவே யிருப்பவர்களுடன் துன்பத்தையே நாடுபவர்களையும், வேடிக்கையுடனும் குதூகலத்துடனும் இருப்பவர்களுடன் மனோவியாகூலத்துடனிருப்பவர்களையும்,

இவ்வுலகப்பற்று அதிகமாயுடையவர்களுடன் இவ்வுலகப் பற்றேயில்லாதவர்களேயும், நல்ல எண்ணமும் நம்பிக்கையு முடையவர்களுடன் கெட்ட எண்ணமும் துரோக சிந்தனேயு முடையவர்களேயும் நமது கலியாணங்கள் கட்டாயப்படுத்திச் சேர்த்து வைக்கின்றன. அவர்கள் வாழ்க்கையை நடத்துமாறு கலியாணம் என்னும் வழக்கத்தினுல் கட்டுப்படுத்தப்படுகின்றனர். அத்தகைய கலியாணங்களில் பொருத்தமென்பதே கிடையாதென்பது நன்கு விளங்குகிறதல்லவா?'

'நீ சொல்வது உண்மையாகத்தான் தோற்றுகிறது. நீ கூறியவாறு கலியாணம் நடத்தப்பட்டதனுல்தான், என்னுடைய வாழ்க்கையில் நான் அதிக துன்பத்தை யடையவேண்டியதாயிற்று. இல்லேயேல், நான் அத்தகைய கஷ்டங்களே அநுபவித்திருக்க வேண்டியதில்லே. ஆனுல் நமது சமூகத்தில், பழைய வழக்கங்களினுலும் ஆசாரங்களினுலும் அழுத்தப்பட்டுக்கிடக்கும் நமது சமூகத்தில், தேகசௌக்கியத்திலும், மனேநிலேயிலும், அறிவிலும் பொருத்தமுடைய ஒரு வாழ்க்கைத்துணேவியை அவர் அடைய அதிக சிரமப்பட்டுத்தான் இருக்க வேண்டும்' என்ருள் செல்லம்மாள்.

'உண்மையில், யாதொரு சிரமமுமின்றி அவர் அத்தகைய மனேவியை அடைந்தார். அவருடைய தந்தையின் சிநேகிதரின் புதல்வியும் கமலாவின் தாயாருமான அவள் எட்டாவது வகுப்பில் படித்துக்கொண்டிருக்கும் போது, அவர்-அவளேக் கண்டு காமுற்ருராம். அவளும் அவர்மீது காதலுற்ருள். அக்கலியாணத்திற்குப் பெற்ருேரும் இசைந்தனர். கலியாணமும் நடந்தது.

'கலியாணம் ஆனதும் அவர் தம்முடைய மனைவியிடத்தில் 'என் கண்ணே! எனக்கு எவ்வளவு சுதந்திரம் இருக்கின்றதோ, அவ்வளவு சுதந்திரம் உனக்குமுண்டு என்பதை நீ அறிந்துகொள். உனக்கு நான் சுதந்திரத்தை அளிக்கிறேன். உன்னை நான் எனக்குச் சமமான துணைவியாகக் கருதுகிறேன். உன்னை நான் அந்த உன்னத நிலைமையிலேயே வைத்திருக்க எண்ணுகிறேன். என்னுடைய அடிமையாகவாவது வேலைக்காரியாகவாவது ஒருபோதும் நினைக்கமாட்டேன்' என்று கூறினாராம்.

'என் பேரன்பே! நான் தங்களுக்குக் கீழ்ப்படிந்து, தங்களுடைய உத்தரவை மீறாமல் இருக்கவேண்டுமென்றே நினைக்கிறேன். தாங்களே என்னுடைய பிரபு, தாங்களே என்னுடைய தெய்வம்". என்று அவள் சொன்னாள்.

'ஓ! அவையெல்லாம் பழைய வழக்கங்கள்; பிரயோஜனமற்றவை. சுதந்திர தாகம் எங்கே பார்த்தாலும் இருந்துகொண்டிருக்கிறது. இக்காலத்தை அநுஸரித்து நாம் வாழவேண்டும். கால தேச வர்த்தமானங்களைக் கவனித்து, சுதந்திரத்துடன் நாம் வாழவேண்டும்' என்று அவர் பதிலளித்தார்.

'தனக்கிருக்கும் சுதந்திரத்தையும் அதிகாரத்தையும் வேண்டாமென்று தள்ளிவிடுவதும் சுதந்திரத்தை அல்லவா குறிக்கிறது. தன்னுடைய மனச்சாட்சியின் உன்னதமான கட்டளைப்படி நடந்துகொள்வதும், வாழ்க்கையின் சாம்ராஜ்யத்தைப் பெறச் சில கொள்கைகளுடன் நடந்துகொள்வதும், சுதந்திரம் என்றே நான் கருதுகிறேன்' என்று அவள் சொன்னாள்.

'"நான் கூறிய வார்த்தைகளைக்கொண்டே என்னை நீ மடக்கிவிட்டாயே. என்ன அற்புதமாயிருக்கிறது' என்று

அவளைத் தழுவி முத்தமிட்டுக்கொண்டே அவர் மேலும், "உன்னிஷ்டப்படியே நடந்துகொள். இந்த தேசத்து மாதர்களின் ரத்தமல்லவா உனக்குள் ஓடிக்கொண்டிருக்கிறது? நான் சில விஷயங்களைக் குறித்து ஒரு முடிவான அபிப்பிராயத்தை அடையுமுன்பாக, இனிமேல் உன்னுடைய மனோபாவத்தையும் அறிந்துகொள்ளவேண்டும்" என்று கூறினர்.

'என்னுடைய அன்பரே! நம்மிருவருடைய கொள்கைகளும் அபிப்பிராயங்களும் ஒன்று என்று அறிந்துகொள்ளுங்கள். நம்மிருவருக்குள் எவ்விஷயத்திலும் பேதமிருக்கக்கூடாது. அவ்வாறிருப்பது வெள்ளைக்காரர்களில் சகஜம். தயை செய்து தாங்கள் அந்த வெள்ளைக்காரர்களின் கொள்கைகளை அநுஸரிக்கவேண்டாம். என்னுடைய சுகதுக்கங்களைத் தங்களுடையனவென்று நான் கருதுகிறேன்' என்று அவர்மீது மெதுவாக மோதிக்கொண்டு அவள் சொன்னாள். அவர்கள் மணவாழ்க்கை அவ்வாறு ஆரம்பமாயிற்று.

ஏழு வருஷகாலம் இவ்வுலகம் அத்தம்பதிகளுக்கு இந்திரலோகமெனவே தோன்றிற்று. அவர்கள் இந்திர போகத்தை அநுபவித்தனர். அவர்களுக்குக் கலியாணம் நடந்த மூன்று வருஷங்களுக்குப் பிறகு கமலா பிறந்தாள். அதிக ஆத்திரத்துடனும் ஆசையுடனுமிருந்த தந்தையிடம் அக்குழந்தையைக் காட்டிய போது, அவர், 'என்னுடைய அவயவங்களின் பிரதிபிம்பமே! என் மனத்திற்கிசைந்த உருவமே! என் மகளே! நீ உன் தந்தையின் அவதாரமேயாவாய்; நீ சிரஞ்ஜீவியாய், நூறாண்டு தீர்க்காயுசுடன் வாழ்வாயாக!' என்று பழைய கிரந்தங்களில் கூறியுள்ளபடி சொல்லிச் சந்தோஷ

மடைந்தார். தனக்கு முதன் முதல் பிறந்த குழந்தை பிள்ளைக்குழந்தையாக இல்லாமற் போயிற்றேயென்று அவள் சிறிது மனம் வருந்தினுள். அவரும் மகளைக் குறித்துப் பேசவே, அவள் சிறிது தைரியத்துடன், 'என் அன்புடைய நாதரே! இக்குழந்தை ஓர் ஆண் குழந்தை யாக இல்லையேயென்று நான் சிறிது வருந்துகிறேன்' என்று சொன்னுள்.

அதற்குச் சுப்பராவ், 'அது ஆண்குழந்தையா யிருந்தாலென்ன, பெண் குழந்தையாயிருந்தாலென்ன' அதைப்பற்றிக் கவலையில்லை. அது என்ன குழந்தையா யிருந்தபோதிலும், அது நம்மிருவரையும் இணைக்கும் தங்கச்சங்கிலியாக இருக்கின்றது. நமக்குத் தெரியாத நம்முடைய முன்னோர்களின் பரம்பரையை விருத்தி செய்யும், நம்மிருவருடைய பிரதிபிம்பமே அக்குழந்தை யென்று நீ நம்பு. நம்மிருவருக்கும் இடையே உள்ள அன்பைக் குறிக்கும் ஓர் உருவம் அது என்பதில் சந்தேக மில்லை. வாழ்க்கையென்னும் கொடியின் வேர் மேலுலகத் தில் நாட்டப்பட்டிருக்கின்றது. அக்கொடி புதிய தளிர் களுடனும் அரும்புகளுடனும் இக்கீழுலகத்தில் படர்ந்து கொண்டிருக்கின்றது. ஒரு குழந்தை, மேல் தோலையும் மாமிசத்தையும் ரத்தத்தையும் தன்னுடைய தாயாரிடத் திலிருந்து பெற்றுக்கொள்கிறதென்றும், எலும்பையும் நரம்பையும் மச்சையையும் தகப்பனுரிடத்திலிருந்து பெற்றுக்கொள்கிறதென்றும் மிகவும் அழகாக நம்முடைய கிரந்தகர்த்தாக்கள் சொல்லியிருக்கிறுர்கள். இந்த ஆண் குழந்தைகளின்மீதிருக்கும் அதிக ஆசையே நம்முடைய இந்திய தேசத்திற்கு ஏற்பட்டிருக்கும் சாபம் என்று தோன்றுகிறது. இந்த ஆண் குழந்தைகளின்மீதிருக்கும்

அபிமானம் தொன்றுதொட்டு நமது தேசத்தில் இருந்து வருகிறது. இந்த அபிமானம் நமது தேச முன்னேற்றத் திற்குத் தடையாயிருக்கின்றது. நமது தேசத்துப் பெண்மணிகளினுல்தான் நமது மதமும் தேசத்தின் கீர்த்தியும் இன்னும் அழியாமல் இருந்துவருகின்றன என்பது மடையர்களாகிய நமக்குத் தெரிகிறதில்லே. இனிமேல் பாரத தேசமாகிய இந்திய தேசம் முன்னேற்ற மடையவேண்டுமாஞல், நாம் நமது இந்தியத்தாயின் பெண்மணிகளின்மீதுதான் நம்பிக்கை வைக்கவேண்டும். ஆண்மக்களோ பசிதீர உண்டு வயிற்றை நிரப்புவதற்காகச் சமயத்திற்கேற்றவாறு நடந்துகொள்ளவேண்டி நேரிடும். உத்தியோக வேட்டையிலும், உத்தியோகத்தைக் காப்பாற் றிக்கொள்ளும் விஷயத்திலும் அவர்களுடைய காலம் கழிந்துவிடும். மேலும் நல்லதெனத் தோன்றும் விஷயங் களே அவர்கள், உத்தியோகத்தையும் வயிற்றுக்கொடுமை யையும் உத்தேசித்துக் கைவிட்டுவிடவேண்டியிருக்கும். தேச முன்னேற்றத்திற்காகவும் மதாபிவிருத்திக்காகவும் அவர்கள் ஊக்கத்துடன் ஒன்றும் செய்ய முடியாதவர் களாய்ப் போய்விடுகிருர்கள். அவர்களுடைய ஆத்திரத் தையும் ஆசையையும் அவர்கள் அடக்கியாளவேண்டும். ஆனுல் உன்னதமான நோக்கத்தையுடைய ஒரு பெண்ணே, அத்தகைய விஷயங்களேக் கவனியாமல், தடையின்றித் தேச முன்னேற்றத்திற்காகப் பாடுபடக்கூடிய நிலைமையில் இருக்கின்ருள். நல்ல தருணத்தில்—அந்நிய தேசத்தவர் களிடம் ஜயசந்திரன் தேசத்தைக் காட்டிக்கொடுத்து விடவே—தேசத்தைக் காப்பாற்றியது யார்? ஜயசந்திரன் மகளாகிய சம்யுக்தை தன்னுடைய கணவனுடனிருந்து கொண்டு தைரியத்துடன் சண்டை செய்யவில்லையா?

தனது தாய்நாட்டைக் காப்பாற்ற முடியாதென்று அவ ளுக்குத் தோன்றிய பின், 'மானம் படவரின் வாழாமை முன்னினிதே' என்னும் முதுமொழியைக் கைக்கொண்டு, தைரியத்துடன் அக்கினிப்பிரவேசம் செய்துவிட வில்லையா? தன் பத்தினியாகிய அழியாப் புகழுடம்பைப் பெற்ற பத்மினியை, அலாவுதீனிடம் கொடுத்து விடுவ தென்னும் மானக்கேடான விஷயத்திற்குச் சம்மதிக்கத் தயாராயிருந்த பேடியான ரத்னசிங்கனையும், ராஜ ஸ்தானத்தின் கீர்த்தியையும் யார் காப்பாற்றினார்கள்? பத்மினி என்னும் அந்த மாது தேசத்திலிருந்த வீரர் களைக் கூப்பிட்டு, சண்டை செய்யும்படி அவர்களுக்கு உற்சாகமூட்டி ராஜஸ்தானத்தின் மானத்தைக் காப்பாற்றி னாள். மற்றொரு சமயம் யசந்வதசிங்கன், யுத்த களத்தி லிருந்து புறங்காட்டி ஓடிவந்தான். அவ்வாறு ஓடிவந்து கோட்டையின் கதவுகளைத் திறக்கும்படி கூறினான். அவனுடைய மனைவி, கதவுகளைச் சார்த்திவிட்டு, அவ்வாறு புறங்காட்டி ஓடிவந்தவர் தன்னுடைய கணவராயிருக்க மாட்டாரென்றும், தன்னுடைய கணவர் அத்தகைய பேடியல்லவென்றும் சொல்லிவிட்டுக் கதவுகளைத் திறவா மல் இருந்துவிட்டாள். தில்லியையும், பீஜபூரையும் எதிர்த் துப் போராடும் விஷயத்தைக் குறித்து, சிவாஜியின் மந்திரியாக இருந்த பிராமணர் நடுங்கிக்கொண்டிருந்த காலத்து, வீரனாகிய சிவாஜிக்கு ஊக்கத்தையும் புத்துயிரையுமளித்து தைரியத்தை உண்டுபண்ணியவள் ஜீஜீபாய் என்னும் பெண்ணல்லவா? இந்தூர் என்னும் சம்ஸ்தானத்திற்குப் பல தலைமுறைகளில் ஆண் மக்களாற் செய்ய முடியாமற்போன சில சீர்திருத்தங்களை, அஹல்யாபாய் என்னும் ஒரு பெண் செய்து முடித்தாள்.

உதயபுரியின் அரசனான மஹாராணாவும், அத்தேசத்தைச் சேர்ந்த பிரபுக்களும் தங்களுடைய துரதிர்ஷ்டம் பொருந்திய தேசத்திற்கு அபாயம் நேரிட்ட காலத்தில், தங்களுடைய உயிரை வெல்லமாக மதித்துச் சண்டை செய்யப் பின்வாங்கினர். அச்சமயத்தில் தைரியசாலியான அழகு வாய்ந்த கிருஷ்ணகுமாரி சந்தோஷத்துடன் விஷத்தை யுண்டு தன்னுடைய தேசத்தைக் காப்பாற்றுவதற்காக உயிர்துறந்தாள். அவ்வாறிருந்தும், இன்னும் 'ஆண் குழந்தைகள் வேண்டும், ஆண் குழந்தைகள் வேண்டும்' என்னும் சப்தம் எங்கும் கிளம்பிக்கொண்டிருக்கிறது" என்று ஒரு நீண்ட உபந்நியாசம் செய்தார்.

' "எனதன்பிற்குகந்தவரே! இப்போது நமக்கு ஒரு பெண் குழந்தையிருப்பதால், ஓர் ஆண் குழந்தையின் மீது இச்சை கொள்ளுதல் பாபமாகாது" என்று அவள் சொன்னாள்.

' "ஆம்; ஆனால் அவ்விஷயம் நம்முடைய யத்தனத்திலாவது இச்சையிலாவது இல்லை. ஆகவே இருப்பதைக் குறித்து விசனிக்கக்கூடாது. இனிமேல் வரப்போவதை எதிர்பார்க்கவுங்கூடாது. கிட்டாதாயின் வெட்டென மறக்கவேண்டும். என் அன்பே! பெண்ணாயிருந்தாலென்ன, பிள்ளையாயிருந்தாலென்ன? அதைப்பற்றி நாம் ஏன் கவலை கொள்ளவேண்டும்? பழைய மூட நம்பிக்கைகள் சில உனக்குள் வேரூன்றியிருக்கின்றபடியால், அவைகளை வேருடன் சீக்கிரமாகப் பிடுங்கியெறிதல் கஷ்டமான காரியம் என்று எனக்குத் தோன்றுகிறது" என்று அவர் சொன்னார்.

' "அது உண்மைதான். அதை வேருடன் பிடுங்கி யெறிய என்னுல் ஆனவரையில் நான் கஷ்டப்பட்டுப் பார்க்கிறேன். நம்முடைய கமலாவைப் படிக்கவைத்து விடலாம். உயர்தரப்பாடசாலைக்கு அவளை யனுப்பிப் படிக்கச் செய்யலாம்" என்று அவள் சொன்னுள்.

'ஏழு வருஷங்களுக்குப் பிறகு கோடிக்கணக்கான ஜனங்களைத் தனக்கு இரையாக்கிக்கொண்ட இன்புளு யன்சா என்னும் கொடிய தொத்து வியாதியாகிய விஷக் காய்ச்சல் கிளம்பியது. கமலாவின் தாயார் அவ்வியாதியால் பீடிக்கப்பட்டாள். சுப்ப ராவ் தம்மால் கூடியவரையில் நல்ல வைத்தியர்களைக் கொண்டு சிகிச்சை செய்து பார்த்தும் பயனற்றுப் போயிற்று. விஷஜுரம் கண்ட மூன்று தினங்கள் கழித்து அவளுடைய நிலைமை கேவல மாகி விட்டது. சுப்ப ராவ் துன்பக்கடலில் ஆழ்ந்து விட்டார். அவர், அவள் கிடந்த படுக்கையருகிலேயே இருந்தார். குழந்தையைப்போல் தேம்பித் தேம்பி அழுதார்.

' "தாங்கள் அழவேண்டாம். தாங்கள் வருந்துவதைக் கண்டு என் மனம் புண்ணுகிறது. உயர்தரப்படிப்பு நான் படியாமலிருந்தாலும், நவநாகரிக எண்ணங்களையும் கொள்கைகளையும் நன்ருக அறிந்திராமலிருந்ததாலும், தங்களுக்கு எவ்வளவு சகாயமாக இருந்திருக்கக்கூடுமோ, அவ்வளவு சகாயமாக இருந்திராததைப்பற்றி நான் விச னிக்கிறேன்" என்று அவள் சொன்னுள்.

' "நீ அப்படிச் சொல்லாதே. நான் பார்ப்பதற்கு அழகுடன் கூடிய வெளிப்பகட்டைக் காட்டும் தாமரைப் பூவைப்போன்றிருந்தேன். அழகாகத் தோன்றிய தாமரைப்

பூவாகிய எனக்கு, அழகையும் தோற்றத்தையும் அளித்த மண் நீ என நம்பு. உன்னிடத்திலிருந்தே நான் அவைகளைப் பெற்றேன். என் கண்ணே! நாம் பிரிந்து போக வேண்டிய இத்தருணத்தில், நீ என்னிடம் என்ன சொல்ல விரும்புகிறாய்?'' என்று அவர் கேட்டார்.

' ''கமலாவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று அவள் சொல்ல, ''நான் அதையே என்னுடைய முதற் கடமையாகக் கொள்வேன். அதைத் தவிர என்னைப்பொறுத்தமட்டில் ஏதாவது சொல்ல எண்ணுகிறாயா?'' என்று அவர் கேட்டார்.

' ''எனக்குப் பதிலாகத் தங்களையும் கமலாவையும் ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளக்கூடிய ஒரு பெண்ணைத் தாங்கள் கலியாணம் செய்து கொள்ளவேண்டும்'' என்றாள் அவள்.

' ''அது ஒருநாளும் முடியாத காரியம். உன்னுடைய இடத்தை வேறு ஒருவராலும் ஏற்றுக்கொள்ள முடியாது'' என்றார் சுப்ப ராவ்.

' ''இப்போது அப்படித்தான் தோன்றும். ஆனால், உண்மையில், உலகத்தில் அத்தகைய அசாத்தியமான விஷயம் கிடையவே கிடையாது. ஒன்று போய்விட்டால், மற்றொன்றைச் சம்பாதிக்கலாம். இயற்கையில் ஒன்றுமில்லாத இடம் கிடையவே கிடையாது. அவ்வாறு இருந்தால் அது இயற்கைக்கு விரோதமானதாகும். ஓர் இடத்தில் ஏதோ ஒரு வஸ்து இருந்துதான் தீரவேண்டும். அதிக விலையுயர்ந்த வஸ்து இருந்த இடத்தைக்கூட மற்றொரு விலையுயர்ந்த வஸ்துவைக்கொண்டு நிரப்பிவிடலாம். ஒரு சிறு குழந்தை தன்னைக் கவனியாத தாயையுங்கூட

மறந்து போகிறது; தனக்குப் பாலூட்டி வளர்ப்பவர் களையே அக்குழந்தை தாயெனக்கொள்ளும். அவளே அதற்குத் தாயாகின்றாள்'' என்று அவள் சொன்னாள்.

'"நீ சொல்வது சாதாரண மனிதர்கள் விஷயத்தில் உண்மையாயிருக்கக்கூடும். ஆனால் என் விஷயத்தில் அது பொருத்தமாகாது'' என்று அவர் சொன்னார்.

'"என் ஆருயிரே! தாங்கள் ஒரு பிரத்தியேகமான பிறவி என்று கருதுகிறீர்களா? நல்ல குணங்கள் வாய்ந்த சாதாரண மனிதர்களுக்கும் தங்களுக்கும் பேதமிருக்கிற தென்று தாங்கள் கருதுகிறீர்கள்? நவநாகரிகக் கொள்கை கள் நிரம்பிய, அதிகமாகக் கற்றறிந்த தாங்களே இவ்வாறு கூறுவது எனக்கு ஆச்சர்யமாக இருக்கிறது. மறு விவாகம் செய்து கொள்வதில் தவறென்ன? அவ்வாறு செய்துகொள்ளுதல் நியாயத்திற்கு விரோதமானதா?''

'"இல்லை. ஆனால் உன்மீது எனக்கு இருக்கும் காதலினாலும் பிரேமையினாலும், நான் உன்னைத் தவிர வேறு எவரையும் மணந்து கொள்ளாமலிருக்க வேண்டி யிருக்கிறது.''

'"விதவைகள் மறுவிவாகம் செய்துகொள்ளவேண்டு மென்று அதிக ஊக்கத்துடன் எடுத்துரைக்கும் தங்க ளுடைய கொள்கைக்குத் தாங்கள் இப்போது கூறுவது முற்றிலும் விரோதமானதாயிருக்கிறதே. ஒரு மனிதனே மனைவியிடத்தில் அவ்வளவு பற்றுடையவனாக இருந்தால், மனித சமூகத்தின் தாயாகிய ஒருபெண் கணவனிடத்தில் எவ்வளவு பற்றுடையவளாயிருக்கவேண்டும்?''

'"நீ சொல்வது உண்மைதான். ஆனால் உன்னைப் போன்றவளைக் காண்பது அரிது. உன்னைப்போலல்லாமல்

வேறு நடத்தை யுடையவர்களைக் கலியர்ணம் செய்து கொள்வதில் எனக்கு இஷ்டமில்லை.''

' ''நீங்கள் சொல்வது எனக்குத் திருப்தியை யளிக்க வில்லை. நான் அதற்குச் சம்மதியேன். ஒரே பழத்தைத் தின்றுகொண்டிருப்பவனுக்கு, மற்றப் பழங்களைத் தின்று பார்த்தாலொழிய அவைகளின் ருசி தெரிவதற்கு நியாய மில்லை. மாம்பழக்காலங்களில் மாம்பழத்தைப் போன்ற இனிப்புடைய பழம் உலகத்தில் கிடையாதென்றே சொல் லலாம்; அதே மாதிரி மற்றப்பழங்கள் பழுக்கும் காலங் களில் அவைகளே ருசியுள்ளனவாகக் கருதப்படுகின்றன. ஏதாவதொரு நாள் தாங்கள் ஒரு பெண்ணைச் சந்திக் கும்படி நேரிடும். அப்பெண் அதிக கஷ்டங்களை அநு பவித்ததன் பயனாக முகம் மிக வாடியவளாயிருப்பினும் இருக்கக்கூடும். அவள் என்னைப் போலவே யில்லாவிடினும் பரவாயில்லை. தங்களுடைய மனதும், அநேக நாட்கள் துன்ப வாழ்க்கை வாய்ந்தவளான அப்பெண்ணின் மனதும், எவ்வாறு வீணையின் தந்திகளால் உண்டாகும் நாதமும் பாடுபவரின் குரலும் சுருதியில் கலந்து வயப் பட்டுப்போகுமோ அதுபோலவே கலந்துகொள்ளும். தங்களுக்கு ஒரு புதிய வாழ்க்கைத் துணைவியும், கமலா விற்கு ஒரு தாயும் ஏற்படுவதைக் கண்டு நான் மேலு லகில் சந்தோஷமடைவேன்'' ' என்றாள்.

'சுப்ப ராவ் அழுதார். அவர் ஒன்றும் சொல்லவில்லை.'

'அவர் ஏன் அழுதார்?' என்று செல்லம்மாள் கேட்டாள்.

'ஒருவேளை அவள் கூறியவாறு நடந்தாலும் நடக் கும் என்னும் எண்ணத்தினால்' என்றாள் காந்தி.

'கமலாவின் தாயார் எவ்வளவு கண்டிப்பாகவும், அழுத்தமாகவும் அவ்விஷயங்களைப்பற்றிக் கூறியிருக்கிறாள்! அவள் கூறிய வார்த்தைகள் எனக்குப் பொருத்தமாயிருக்கின்றன!' என்று செல்லம்மாள் சொல்லும் போது அவளுடைய கண்கள் பிரகாசித்தன.

'தாயே! தாங்கள் ஏன் அதிக வருத்தமடைந்தவர்களாகக் காணப்படுகிறீர்கள்?' என்று காந்தி கேட்டாள்.

'குழந்தாய்! நீ சொல்வதைக்கேட்டு வருத்தமடையாமலிருக்க ஒருவராலும் முடியாது. பிறகு என்ன நடந்தது சொல்' என்றாள் செல்லம்மாள்.

காந்தி மறுபடியும் சொல்லத் தொடங்கினாள் :—'ஒரு நிமிஷங் கழித்து, "உன்னைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் நான் இதுவரையில் காதலோடு கூடிய கண்களுடன் பார்த்ததே யில்லையே" என்று சுப்ப ராவ் சொன்னார். "அப்படியானால், தாங்கள் அவ்வாறு பார்ப்பதற்குத் தொடங்கினால், கமலாவிற்கு மற்றொரு தாயார் ஏற்படவேண்டிய காலம் வந்துவிட்டதென்று எண்ணிக்கொள்ளுங்கள்" என்று அவள் சொன்னாள். மூன்று மணி நேரம் கழிந்த பிறகு அவளுக்கு நினைவில்லாமல் போய்விட்டது. ஒரு மணி நேரங்கழித்து ஒன்றும் பேசாமல் அவள் இறந்து போய்விட்டாள். அவளுடைய கண்கள் மாத்திரம் கணவனையும் கமலாவையும் நாடிச்சென்றன. இதுவரையில் கமலாவிற்குச் சுப்ப ராவே தந்தையாகவும் தாயாகவும் இருந்து வந்திருக்கிறார். இன்றையதினம் வரையில் காதலுடன் கூடிய பார்வையை ஒரு பெண்ணின்மீதாவது அவர் செலுத்தவில்லை யென்று கமலா சொல்கிறாள்.'

'கமலாவிற்கு எப்படித் தெரியும்? அவளால் அவ் விஷயத்தைத் தெரிந்து கொள்ளத்தான் முடியுமா?' என்று செல்லம்மாள் கேட்டாள்.

'அவர் எந்த விஷயத்தையும் அவளிடத்தில் சொல் லாமல் மறைத்து வைப்பதில்லை. அவர் எப்பொழுது ஒரு பெண்ணின்மீது காமுறுகிருரோ, அப்பொழுதே அவளுக்குத் தெரிவித்துவிட்டுக் கலியாணம் செய்து கொள்வதாகச் சொல்லியிருக்கின்ருராம்' என்ருள் காந்தி.

'இவ்விஷயத்தைக் குறித்துக் கமலாவின் அபிப்பி ராயம் என்ன?' என்று செல்லம்மாள் கேட்டாள்.

'அவர் மறுவிவாகம் செய்து கொள்ளத்தான் வேண்டு மென்பது அவளுடைய அபிப்பிராயம். ஆனல் எல்லா விஷயங்களிலும் அவருக்குப் பொருத்தமான ஒரு மாதை அவர் மணம்புரிய வேண்டுமென்று அவள் கருதுகிருள். அவர் உங்களைக் கலியாணம் செய்துகொண்டால் மிகவும் நன்ருயிருக்குமென்று அன்ருெரு நாள், அவள் என்னி டம் சொல்லிக்கொண்டிருந்தாள். அப்படி நடந்தால் நானும் என் சிநேகிதியும் பிரிந்துபோகாமல் ஒரே வீட் டில் வசித்துக்கொண்டிருப்பதற்கு அநுகூலமாயிருக்கு மென்று அவள் என்னிடம் சொன்னுள்' என்று காந்தி சொன்னுள்.

செல்லம்மாளின் முகம் மலர்ந்ததைக் கண்டு காந்தி ஆச்சரியப்பட்டாள். 'என் தாயே! கமலா வேடிக்கை யாகச் சொல்லிக்கொண்டிருந்த வார்த்தைகளை நான் தங்களிடம் சொல்லியிருக்கக் கூடாது' என்று அவள் சொன்னுள்.

'அதைக்குறித்துக் கவலைப்படாதே' என்று செல்லம்மாள் சொல்லிவிட்டாள்.

பிறகு அவள் சுப்ப ராவ் இருக்கும் பக்கத்தைத் திரும்பிப் பார்த்தாள். சுப்ப ராவ் தன்னைப் பார்ப்பதைக் கண்டதும், அவளுடைய முகம் மலர்ந்தது. 'காந்தி! அதோ பார், கமலாவும் சுப்ப ராவும் நம்மையே பார்த்துக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் என்ன பேசிக்கொண்டிருப்பார்களென்று, நீ நினைக்கிறாய்?' என்று செல்லம்மாள் சொன்னாள்.

'தங்களையும் தங்களுடைய மண வாழ்க்கையையும் பற்றித்தான் பேசிக்கொண்டிருப்பார்களென்று எனக்குத் தோன்றுகிறது' என்றாள் காந்தி. அவள் கூறியபடி அதைப் பற்றித்தான் அவர்கள் பேசிக்கொண்டிருந்தனர்.

செல்லம்மாள் சுப்ப ராவினுடைய விருத்தாந்தங்களைப்பற்றிக் காந்தியிடமிருந்து கேட்டு அறிந்துகொண்டிருந்த அதேசமயத்தில் தங்களுடைய பேச்சுமுடிந்த பிறகு சுப்ப ராவும் செல்லம்மாளைக் குறித்தும் காந்தியைக் குறித்தும் கமலாவைக் கேட்டுக்கொண்டிருந்தார்.

'அங்கே பேசிக் கொண்டிருக்கிறார்களே அவர்கள் யார்? இதற்கு முன்பு மூன்று நான்கு தடவைகளாக, நான் இங்கு வரும்போதெல்லாம் அவர்களையும் பார்க்கிறேன். இவ்விடத்தில் மற்றதினங்களில் கூட்டம் அதிகமாக இருந்தபடியால் அவர்களைப்பற்றி உன்னைக் கேட்கவில்லை. இப்போது நாம்மாத்திரம் தனியாயிருப்பதாலும், நாம் பேசுவதைக் கேட்கமுடியாத தூரத்தில் அவர்கள் இருப்பதாலும் அந்தக் கேள்வியைக் கேட்கிறேன்' என்று சுப்ப ராவ் சொன்னார்.

'ஓ! அவள் என்னுடைய அந்தரங்கமான சிநேகிதியாகிய காந்தி என்னும் பெயருடையவள். மற்ெறாருத்தி அவளுடைய தாயாராகிய செல்லம்மாள்.'

'காந்தியின் தகப்பனார் என்ன உத்தியோகத்திலிருக்கிறார்?'

'அவன் ஒரு மடையன்; அசட்டுத்தனத்தையும் முரட்டுத்தனத்தையும் தவிர, அவனிடத்தில் வேறு எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை.'

'ஆனால், அவர் இப்போது உயிருடனில்லையா?'

'இல்லை, இவ்வுலகத்தின் க்ஷேமத்திற்காக அவன் ஆறு வருஷங்களுக்கு முன்பு இறந்துபோனான். இவ்வுலக வியவகாரங்களை அடக்கியாளும் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பது அவன் இறந்ததனால் தெரியவருகிறது.'

'அப்படியானால், அம்மாது அதிகக் கஷ்டங்களை அநுபவித்திருக்க வேண்டுமென்று தெரிகிறது.'

'ஓ! அந்த மடையன் உயிருடனிருக்கும் வரையில், அவளுடைய வாழ்க்கை நரகவாழ்க்கையை ஒத்திருந்தது. துன்பத்தைத் தவிர இன்பமென்பது என்னவென்பதை அவள் கண்டிருக்கவே மாட்டாள். அந்தத் துக்கத்தினால் அவள் பட்ட கஷ்டம் இவ்வளவு என்று சொல்லிமுடியாது. அந்த விசனக்குறிகளை இப்போதுகூட அவளுடைய முகத்தில் தாங்கள் பார்த்திருக்கலாம்?' என்று கமலா சொல்ல, 'ஆம், நான் பார்த்திருக்கிறேன். பார்வைக்கு அவள் மணவாழ்க்கையில் அதிகத் துன்பத்தை யடைந்திருப்பவளாகத்தான் காணப்படுகிறாள்' என்று சுப்ப ராவ் சொன்னார்.

'என்னுடைய தாயார் கூறிய வார்த்தைகள் தங்களுக்கு ஞாபகமிருக்கின்றனவா? அம்மங்கை என்னுடைய தாயாரின் ஸ்தானத்தை வகிக்கப்போகிறுளென்று நான் கருதவேண்டியிருக்கிறது' என்று கமாலா சொன்னுள்.

சுப்ப ராவினுடைய முகம் மலர்ந்தது. அவருடைய மனத்தில் பெருங் குழப்பமேற்பட்டது. 'குழந்தாய்! நான் அவைகளைக் கூறியபோது அவைகளே உன்னுடைய தாயின் வார்த்தைகள் என்பதைத் தெரிந்து கொள்ளவில்லை' என்று சுப்ப ராவ் தடுமாற்றத்துடன் பதிலளித்தார்.

'அதைக் குறித்துக் கவலைப்பட வேண்டியதில்லை. என்னுடன் பேசிக்கொண்டிருக்கும் போது தாங்கள் அந்த அம்மாளைக் கடைக்கண்களினுல் அடிக்கடி பார்த்து வந்ததையும், அந்த அம்மாளும் தங்களை அடிக்கடி பார்த்துக் கொண்டு வந்தையும் பார்த்து, நான் வேடிக்கையாக அப்படிச் சொன்னேன்' என்றுள்.

சுப்ப ராவின் முகம் மறுபடியும் மலர்ந்தது. 'கல்லூரிகளில் படிக்கும் இக்காலத்துப் பெண்கள் அசாத்திய சாமர்த்தியம் வாய்ந்தவர்களா - யிருக்கின்றனர். அவர்களுக்குத் தெரியாத விஷயம் ஒன்றுமேயில்லை' என்று அவர் சொன்னுர்.

'நாங்கள் ஏன் அவ்வாறிருக்கக் கூடாது? எல்லை கடந்து எல்லாவிஷயங்களையும்பற்றித் தெரிந்துகொண்டு, அறிவை ஏன் நாங்கள் விசாலப்படுத்திக்கொள்ளக் கூடாது? பெண்கள் முன்னேற்ற மடையவேண்டும் என்பதும், அவர்களுக்கும் அறிவை விருத்திசெய்து கொள்வதற்குச் சுதந்திரம் உண்டு என்பதும் தங்களுடைய அபிப்

பிராயமல்லவா? இப்போது தங்களுடைய அபிப்பிராயங்களை மாற்றிக்கொண்டு விட்டீர்களா! என்ன?'

'இல்லை, என் கண்ணே! நான் என்னவோ பழைய சுப்ப ராவாய்த்தா னிருக்கிறேன். என்னிடத்தில் ஒரு மாறுதலும் ஏற்படவில்லை. காந்தியின் தாயாரின் மண வாழ்க்கையைக் குறித்து உனக்குத் தெரியுமானல் நான் கேட்க விரும்புகிறேன்.'

'எனக்குத் தெரியுமா என்று கேட்கிறீர்கள்! செல்லம்மாளுக்குத் தெரிந்திருப்பதைவிட அதிகமாக எனக்குத் தெரியும். ஏனெனில் செல்லம்மாளுக்குத் தெரிந்திருப்பவை யனைத்தையும், செல்லம்மாள் காந்தியிடம் சொல்லி யிருக்கிருள்; காந்தி அவற்றை என்னிடம் கூறியிருக்கிருள். இன்னும் பலர் மற்றும் சிலவிஷயங்களைக் காந்தியிடம் சொல்லி யிருக்கின்றனர். அவர்கள் கூறிய விஷயங்களும் எனக்குத் தெரியுமாகையால்தான், செல்லம்மாளைவிட அதிகம் எனக்குத் தெரியும் என்றேன்?'

'ஆனுல் அவற்றைச் சொல்.'

'செல்லம்மாள், ஒரு கிராமப்பள்ளிக்கூட உபாத்தியாயரின் பெண். தன் தந்தையினிடத்திலேயே அவரது பள்ளிக்கூடத்திலேயே அவள் கல்விபயின்று வந்தாள். அவளுக்குப் பன்னிரண்டு வயதானபோது சிறிது இங்கிலீஷ் எழுதப்படிக்கத் தெரிந்தது. தாய்ப்பாஷையிலும் அவளுக்குச் சிறிது ஞானம் இருந்தது. பிறகு கீர்த்தியும் செல்வாக்குமுள்ள குடும்பத்தைச் சேர்ந்த ஒரு வாலிபனுக்கு வாழ்க்கைப்பட்டாள். புக்ககத்தில் அப்பெண் அடி வைத்த நாள் முதற்கொண்டு, அவளுடைய புத்தகங்களை அவன் வெறுத்தான். ஒரு வருஷமாவதற்குள், அவை

களைத் தீக்கு இரையாக்கி விட்டான். "வேண்டாத பெண் டாட்டி கை பட்டால் குற்றம், கால் பட்டால் குற்றம்" என்னும் முதுமொழிக்கிணங்க, ஏதோ ஒரு காரணங் கற்பித்து அவளை அடிக்கடி அடித்துக்கொண்டே வந் தான். அவன் காமப்பித்துப் பிடித்த மடையனு யிருந் தான். அவனது மதி மழுங்கிப்போயிருந்தது. தனக்கு வேண்டியபோதெல்லாம் உபயோகப்படக்கூடிய அடிமை என்றே அவன் தன்னுடைய மனைவியை நடத்திவந்தான். மனைவியைப்பற்றி அவனுக்குத் தெரிந்திருந்தது அவ்வளவு தான். அவன் பத்தாவது வகுப்புவரை படித்து விட்டுப் பணங்கட்டி ஐந்துதடவை பரீக்ஷைக்குச் சென்று பார்த் தான். தோல்வி யடைந்து போகவே, படிப்பையும் விட்டு விட்டான். அவன் 'சாப்பாட்டுராமனு' யிருந்தான். சமையலைப்பற்றித் தூற்றிக்கொண்டே யிருப்பான். அவள் எவ்வளவு சிரமப்பட்டுச் சமைத்தபோதிலும், குறைகூறும லிரான். அவளிடத்தில் அன்பு என்பதே அவனுக்கில்லை. அவள் அதைப்பற்றிப் பேசினல், அவளை அவன் நையப் புடைத்துவிடுவான். ஈன இரக்கமில்லாமல் மிருகங்களை அடிப்பதைப்போல அவளை அவன் அடிப்பான். "நான் இவ்வுலகில், உன்னுடைய பிரபுவும் அதிகாரியு மல்லவா? உன் பிரத்தியக்ஷ தெய்வமல்லவா?" என்று ஒரு சந்தர்ப் பத்தில் அவன் அவளைக் கேட்டானும்.

"தாங்களே என்னுடைய தெய்வம் என்பதில் சந்தேக மில்லை. அதனுல்தான், இக்கெட்ட வழக்கங்களை விட்டு விடும்படிக்கு நான் தங்களைக் கேட்டுக்கொள்கிறேன்" என்று அவள் சொன்னுள். அவ்வாறு சொன்னதற்கு அவன் அவளை நன்ருக அடித்தான். நாளாக நாளாக அவனுடைய மூர்க்கத்தனம் அதிகரித்துக்கொண்டே

வந்தது. குடிப்பது எவ்வாறு ஒரு வழக்கமாகிவிடுமோ, அதேமாதிரி, மனைவியை அடித்தலும் அவன் வழக்கமாகி விட்டது. காந்தி பிறந்த பிறகும் அவ்வழக்கம் நின்று போகவில்லை. அந்த மூர்க்கனுக்கு அக்குழந்தைமீதுகூட ஆசையே யில்லாமற் போய்விட்டது. அவனுடைய காம வெறியினால் ஏற்பட்ட ஒரு பிரயோஜனமுமற்ற வஸ்து வென்று அவன் அக்குழந்தையைக் கருதினான். அடிப்பது எப்போதும் போலவே நடந்துகொண்டுவந்தது. செல்லம் மாள் பட்டினிகிடந்து பார்த்தாள்; ஜபங்கள் செய்துபார்த் தாள்; அவைகள் அவளைப் பலஹீனப்படுத்தினவே யொழிய அவள் கணவனது புத்தி திரும்பவில்லை. அவள் பலஹீனமடைந்ததால், விழும் அடிகளைப் பொறுக்கச் சக்தியற்றவளாய்ப் போனாள். ஆகவே அம் முறைகளை அவள் ஒழித்துவிட்டாள். அக்கம்பக்கத்தி லிருப்பவர்க ளிடம் தன்னுடைய குறைகளை அவள் எடுத்துச் சொன் னாள். அவர்களும் அவளுடைய நிலைமையைக் கண்டு பரிதபித்தனர். அவர்கள், "பெண்ணாய்ப் பிறந்த நாம் கஷ்டப்பட்டுத்தான் தீரவேண்டும். இப்பெண் ஜன்ம மெடுத்தால் அப்படித்தான் கஷ்டப்படவேண்டி யிருக் கும். அது நம்முடைய தலையெழுத்து. கணவர்கள் இஷ்டப்படி செய்யுமாறு நாம் உட்படவேண்டியதுதான்" என்றார்கள்.

' "ஆனால், உண்மையில் நான் படும் துயரத்தை என்னால் பொறுக்க முடியவில்லை" என்றாள் செல்லம்மாள்.

' "சகிக்க முடியாத துன்பம் இவ் வுலகி லில்லை. நாளடைவில் எல்லாம் சரிப்பட்டுப் போய்விடும்" என்று அவர்கள் கூறினர்.

' "இவ்வளவு மூர்க்கத்தனத்துடன் நடந்து கொள்ளும் கணவர்களும் தெய்வங்க ளாவார்களா?" என்று செல்லம்மாள் கேட்டாள்.

' "ஏன் ஆகக்கூடாது? நம்முடைய புராணங்களில் சில தெய்வங்கள் மிகவும் கேவலமாக நடந்துகொண்டிருந்ததைப்பற்றி நாம் படித்த தில்லையா?" என்று அவர்கள் எடுத்துரைத்தனர்.

' "பலமுடையவர்கள், பேதைகளை அவர்களுக்கு அடங்கி நடக்கும்படிதான் செய்வார்கள்."

' " அப்படியானால் நாம் அவர்களை எதிர்க்கப் போதுமான சக்தியை அடையவேண்டும். இத்தகைய சந்தர்ப்பங்களில் பலஹீனம் என்பது பாபத்தை உண்டுபண்ணிவிடும்" என்றாள் செல்லம்மாள்."

' " நீ என்ன பிரயோஜனமற்ற கனவு காண்கிறாய்? அத்தகைய கணவர்களை எதிர்ப்பதற்காகக் கூடும் கூட்டத்தில் யார் சேருவார்கள்? அநேகர் சந்தோஷத்துடனிருப்பதாலும், சிலர் அக் கூட்டத்தில் சேர்ந்தால் வீடுகளில் தங்களுடைய நிலைமை மிகவும் கேவலமாகப் போய்விடும் என்னும் பயத்தினாலும் சேரமாட்டார்கள்" என்று அவர்கள் கூறினர்.

' "உண்மைதான், ஆனால் நான் என்ன செய்வது?" என்று செல்லம்மாள் கேட்டாள்.

' "பொறுமையுடன் கஷ்டப்பட்டுத்தான் தீரவேண்டும். எதிர்வார்த்தை பேசாமல், அவனுக்குக் கீழ்ப்படிந்து நட" என்று அவர்கள் சொன்னார்கள்.

'அவர்களிடம் மறுபடியும் நியாயம் பேசுவதில் பிரயோஜனமில்லை யென்று அவள் அறிந்து கொண்டாள்.

அன்றையதினம் ராத்திரி, அவர்கள் பேசிக்கொண்டிருந்த விஷயத்தைத் தெரிந்துகொண்டு அவள் கணவன் எப்போதும் அடிப்பதைவிட அதிகமாக அவளை யடித்தான். அத்துடன் திருப்தியடையாமல் முதன் முதலாக, அச் சிறு குழந்தையையும் அவன் அடிக்கத் தொடங்கினான். என்ன இருந்தாலும் பெற்ற மனம் பித்தல்லவா? செல்லம்மாளுக்குக் கோபம் பொங்கி எழுந்தது. ஒரு பெண்புலி எவ்வாறு தன்னுடைய குட்டியைக் காப்பாற்றுவதற்குச் சீறிக்கொண்டு பாய்ந்து செல்லுமோ, அதே மாதிரியாகச் செல்லம்மாள் தாவிச்சென்று தன் குழந்தையாகிய காந்தியைக் காப்பாற்றினாள். அதுகாறும் உள்ளே அடைத்துக்கொண்டிருந்த வெள்ளம், அணையை உடைத்துக் கொண்டு திடீரென வெளியே வந்தது. அடக்கப்பட்டிருந்த கோபம், தீப்போல் பொங்கி எழுந்தது. பழிதீர்த்துக் கொள்ள வேண்டும் என்னும் எண்ணம் அவள் மனத்தில் குடிகொண்டது. பிசாசுபோன்ற அவன் கையிலிருந்த தடியைப் பிடுங்கிக்கொண்டு, அவள், அவனுடைய கொழுப்படைந்திருந்த முதுகின்பேரில் நாலைந்து அடியடித்தாள். வலி பொறுக்கமாட்டாமல் அவன் நாய்போல ஊளையிட்டுக்கொண்டே அடுப்பில் எரிந்துகொண்டிருக்கும் கொள்ளிக்கட்டையை எடுத்துக்கொண்டு வந்தான். செல்லம்மாள் வீட்டைவிட்டு வெளியே ஓடிவிட்டாள். அன்றைய தினம் ராத்திரி, தனக்குத் தெரிந்திருந்த, அருகிலிருந்த ஒரு நல்ல மனிதர் வீட்டில் தங்கியிருந்தாள். மறுநாள் அவள் தன்னுடைய தகப்பனார் இருக்குமிடம் போய்ச்சேர்ந்தாள். அவளுடைய தகப்பனார் உபாத்தியாயருக்கு வேண்டியவைகளை அவளுக்குச் சொல்லிக் கொடுத்துப் பெண்கள் பாடசாலையில் உபாத்தியாயர் வேலையையும் அவளுக்கு

ஏற்படுத்திக் கொடுத்தார். அவளுடைய கணவனுயிருந்த மடையன் மறுபடியும் கலியாணம் செய்து கொண்டான். ஆனால் ஒருவருஷத்திற் கெல்லாம், கெட்டுப்போன வஸ்துக் களை யெல்லாம் மிதமில்லாமல் வயிறு நிரம்பப் பகாசுரன் போலத் தின்றதனால் வாந்திபேதி கண்டு இறந்துபோனான். அவன் இறந்து இப்போது ஆறுவருஷங்க ளாகின்றன. அவனுடைய இரண்டாவது மனைவியையும் அவன் கொடு மையுடனேயே நடத்திவந்தான். அவளுடைய பெற்றோர் கள் பரம ஏழைகளாவுகம் ஆதரவற்றவர்களாகவும் இருந்த படியால் அவள் அவர்களிடம் திரும்பிச் செல்ல முடிய வில்லை. ஆகவே அந்த மூர்க்கன் இறந்துபோகும் வரை யில் அவள் அவனிடத்திலேயே இருக்கவேண்டிய தாயிற்று. செல்லம்மாள் இப்போது இந்நகரத்திலுள்ள ஒரு பாட சாலையில் உபாத்தியாயையாக இருக்கிறாள். அவள் சௌக்கியமாகவே இருக்கிறாள். அவளுடைய மணவாழ்க் கையை நினைத்தால் இன்னும் அவள் உடம்பு நடுங்கு கிறது!'

'பாவம், அவள் தன்னுடைய வாழ்க்கையைத் தனிமை யாகக் கழிக்கவேண்டியிருக்கிறது.'

'என் தந்தையே! தாங்களும் அவ்வாறேதான் கழிக்க வேண்டியிருக்கிறது.'

சுப்ப ராவுடைய முகம் மறுபடியும் மலர்ந்தது. 'நம் முடைய பழக்க வழக்கங்கள் எவ்வளவு கேவலமாகப் போய்விட்டன. நம்முடைய சட்டங்கள் அநியாயமான சட்டங்களாக இருக்கின்றன. நமக்கு எவ்வளவு துன் பத்தை உண்டுபண்ண வேண்டுமோ அவ்வளவு துன்பத்தை யும் உண்டு பண்ணுவதற்காகவே அவைகள் ஏற்பட்டிருக் கின்றன என்று நாம் நினைக்கவேண்டி யிருக்கிறது. ஆனால்

சக்தியற்ற மனிதப் பதர்களாகிய நாம் என்ன செய்யக் கூடும்?' என்று அவர் சொன்னார்.

'நாம் அவைகளைச் சீர்திருத்த முயலுகிறோமா?'

'அப்பெண்மணியினுடைய துயரத்தை எடுத்துக் கொள்: அந்தகைய துன்பங்களைப் போக்க என்ன செய்வது?'

'இப்போது அவள் சுயேச்சையாயிருப்பதால், மனைவியை இழந்த ஒருவர் அவளைக் கலியாணம் செய்து கொள்ளும்பக்ஷத்தில் இரண்டுபேரும் லாபத்தை அடைவார்கள் என்பதில் சந்தேகமில்லை.'

'ஆனால் அவள் கலியாணம் செய்துகொள்ளத் தயாராயிருக்கிறாளா?'

'எந்தப் பெண் கலியாணம் செய்துகொள்ளமாட்டேன் என்று சொல்லுவாள்? திக்கற்ற பெண்களுக்குத் தகுந்த கணவர் கிடைக்கும் பக்ஷத்தில் அவர்கள் கண்டிப்பாகக் கலியாணம் செய்து கொள்வார்கள்.'

'அவர்களுக்குத் தகுந்த கணவர் என்றால் எப்படி இருக்கவேண்டும்?'

'உதாரணமாக, தங்களைப்போல ஒருவர் என்று நினைத்துக் கொள்ளுங்கள்.'

மறுபடியும் சுப்பராவினுடைய முகம் மலர்ந்தது. கமலா அதைக்கண்டு சந்தோஷமடைந்தாள்.

'தந்தையே, என் தாயார் இறந்த பிறகு தாங்கள் தனிமையாக வசித்துவருவதால், தங்களுடைய வாழ்க்கை அதிக துன்பமுடையதாகிவிட்டது. தாங்கள் ஏன் மறுபடியும் கலியாணம் செய்துகொண்டு சௌக்கியமாக வாழ்ந்துவரக்கூடாது?'

'அவ்வாறு நான் செய்துகொள்ளுதல் உனக்கு இஷ்டமா? என் கண்ணே, நீ உன் மனத்திலுள்ளதைச் சொல்.'

'எனக்கு இஷ்டமா என்று கேட்கிறீர்கள்? எனக்கு அது சந்தோஷத்தையும் திருப்தியையும் அளிக்கும்.'

'என் கண்மணி என்றால் உன்னையே சொல்லவேண்டும். உன் தாயாரைப்போலவே, நீயும் சுயநலத்தைக் கருதுவதில்லை. எல்லா விஷயங்களிலும் உன் தாயாரை நீ ஒத்திருக்கிறாய்.'

'காந்தியும் செல்லம்மாளும் பேசுவதை நிறுத்திவிட்டு நம்மைப் பார்த்துக்கொண்டிருக்கின்றனர். நாம் அவ்விடத்திற்குப் போகலாம் வாருங்கள்' என்று கமலா சொன்னாள்.

காந்தியும் செல்லம்மாளும் இருந்த இடத்திற்குச் சுப்பராவும் கமலாவும் சென்றனர்.

'காந்தி, இவர் என்னுடைய தகப்பனாராகிய சுப்பராவ். என் தந்தையே, இவள் என்னுடைய சிநேகிதியாகிய காந்தி' என்று சொல்லிக் கமலா அவர்களை அறிமுகப்படுத்திவைத்தாள்.

'இவர் என்னுடைய தாயார். இவருடைய பெயர் செல்லம்மாள்' என்று காந்தி சுப்பராவிடம் சொன்னாள்.

சுப்பராவும் செல்லம்மாளும் உபசாரவார்த்தைகள் பேசிக் கொண்டனர்.

'சாயங்கால வேளை மிகவும் அழகாக இருக்கின்றது. மனோரம்மியத்தை அளிக்கின்றது. நாம் ஏன் கடற்கரையோரமாகச்சென்று உலாவிவரக் கூடாது?' என்று சுப்பராவ் தம்முடைய மகளிடம் கூறிவிட்டுச் செல்லம்மாளை

ஒரு பார்வை பார்த்தார். அப்பார்வை அர்த்தத்துடன் விளங்கியது.

'அப்படியே செய்யலாம்' என்று கமலா சொல்லி விட்டுத் தன்னுடைய சிநேகிதியைப் பார்த்து, 'காந்தி, நீயும் வருகின்றாயா?' என்று கேட்டாள்.

'தாயே, தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?' என்று காந்தி தன் தாயாரைக் கேட்டாள்.

'ஓ, அது எனக்கு அதிக மகிழ்ச்சியை அளிக்கும். நான் வருவதற்குத் தடையில்லை' என்று சுப்பராவைப் பார்த்தவண்ணம் செல்லம்மாள் பதிலளித்தாள்.

'நம்மைப்போல ஜலதீரங்களுக்கு அருகில் வசிப்பவர் கள் இத்தகைய சந்தர்ப்பத்தைக் கைவிட்டுவிடக்கூடாது. சமுத்திரக் கரையின் ஆனந்தமே ஆனந்தம்; அதை நம் மால் வெறுக்கமுடியாது' என்றாள் செல்லம்மாள்.

அந்த நால்வரும் கரையில் மோதிக்கொண்டிருக்கும் அலைகளின் ஓரமாகச் சென்றுகொண்டிருந்தனர். கமலா காந்தியின் கையைப் பிடித்திழுத்து, 'நாம் மணலின் மீது சிறிது ஓடுவோம், வா' என்று சொன்னாள். அவ்விரண்டு பெண்களும் மணலின் மீது ஓடினார்கள். அவர்களுடைய பெற்றோர்கள் பின்னால் வரவேண்டியதாயிற்று. ஒருவர் பக்கத்தில் மற்றொருவராக அவர்கள் நடந்தனர்.

'நமக்கு வயதாகிவிட்டதால், நம்மால் ஓடமுடியாது' என்று சுப்பராவ் சொன்னார்.

'ஆம்' என்றாள் செல்லம்மாள்.

'அப்பெண்கள் சகோதரிகளைப்போல் நேசம் பூண் டிருக்கின்றனர். ஒருவரைவிட்டு ஒருவர் பிரிவதே கிடை யாது' என்று மேலும் கூறினாள்.

'அவ்வாறு இருப்பதில் குற்றமென்ன?' என்றார் சுப்ப ராவ்.

'போன ஜன்மத்தில் உண்மையில் அவர்கள் சகோதரி களாக இருந்தனரோ என்னவோ!' என்று சிரித்துக் கொண்டே செல்லம்மாள் சொன்னாள்.

'ஆனால், நாம் போன ஜன்மத்தில் என்னவாயிருந் தோமோ?' என்று சுப்பராவ் கேட்டார். செல்லம்மாள் வெட்கத்தினால் தலையைக் குனிந்துகொண்டு முகத்தை ஒரு பக்கமாகத் திருப்பிக்கொண்டாள். அப்பெண்கள் நூறுகஜ தூரத்திற்கப்பால் சென்று பெருமூச்சுவிட்டுக் கொண்டு நின்றுவிட்டனர்.

'அவர்கள் நல்ல ஜதையாகக் காணப்படுகின்றனர். அவர்கள் அதிக சந்தோஷத்துடனிருப்பதாகத் தெரிகிறது. உண்மையாகவே, ஏன் அவர்கள் கணவனும் மனைவியுமாக வாழக்கூடாது?' என்று கமலா காந்தியினிடம் சொன்னாள்.

அந்த வார்த்தைகளைக் கேட்டுக் காந்தி ஆச்சரியப் பட்டாள். அவளுடைய சிநேகிதர்களிடம் பழகுவதனால் விதவைகள் மறு விவாகம் செய்துகொள்ளுவது சகஜம் என்று அவளுக்கு நன்கு தெரிந்திருந்தபோதிலும், தன் னுடைய தாயே அவ்வாறு செய்து கொள்ளப்போகிறாள் என்னும்போது அவள் திடுக்கிட்டாள். 'என் தாயார் அதற்கு இசையமாட்டாள்' என்று அவள் சொன்னாள்.

'உன் தாயாருக்கு இஷ்டமிராதா? அதையும் பார்க்க லாம். ஆனால் நீ குறுக்கிடாதே. நீ அவ்வாறு தடை செய் தல் மிகவும் கேவலமாகக் கருதப்படும்' என்றாள் கமலா.

பிறகு அவள் காந்தியைத் தழுவிக்கொண்டு, 'என் அருமைச் சகியே! நீ கேவலமான ஒன்றையும் செய்யமாட்

டாயென்று நான் நினைக்கிறேன். உன்னை என்னுடைய சகோதரி என்றே நான் கருதுகிறேன். அவர்கள் கலியாணம் செய்துகொண்டால் அவர்களிருவரும் சந்தோஷமடைவார்கள். நாமும் சந்தோஷத்துடனிருக்கலாம். ஏனெனில் நாம் பிரியவேண்டியிராது' என்று கமலா சொன்னாள்.

'நாம் கலியாணம் செய்துகொள்ளும்வரையில்தானே?' என்று காந்தி சொன்னாள். காந்தியின் எண்ணம் அவளுடைய கலியாணத்தின் மீது சென்றது.

'ஆம், அதை நான் சொல்லவேண்டுமா! இப்பொழுது நாம் திரும்பிப் போகலாம் வா. நம்முடைய பெற்றோர்களின் கலியாணத்தை நிச்சயம் செய்த பிறகு நாம் வேடிக்கை பார்க்கலாம். கோடிக்கணக்கான கலியாணங்கள் பெற்றோர்களாலேயே நிச்சயிக்கப்பட்டு வருகின்றன. அதற்குப் பழியாக, குழந்தைகளால் நிச்சயிக்கப்பட்ட இந்தப் பெற்றோர்களின் கலியாணம் சிறந்து விளங்கும்' என்று கமலா சொன்னாள்.

அப்பெண்கள் பெற்றோர்கள் இருக்குமிடத்தை அடைந்தனர். 'நீயும் காந்தியும் போன ஜன்மத்தில் சகோதரிகளாக இருக்க வேண்டும் என்று காந்தியின் தாயார் சொல்லிக்கொண்டிருந்தாள்' என்று சுப்பராவ் கமலாவிடம் சொன்னார்.

'இருந்திருக்கக்கூடும்; நீங்களிருவரும் சம்மதிக்கும் பக்ஷத்தில், இந்தப் பிறவியிலுங்கூட நாங்கள் சகோதரிகளாக இருக்கக்கூடும்' என்று கமலா சொன்னாள்.

முகமலர்ச்சியுடன் சுப்பராவ் செல்லம்மாளைப் பார்த்தார். செல்லம்மாளும் சந்தோஷக்குறிகளுடன் கூடிய முகத்துடன் காந்தியைப் பார்த்தாள்.

'இவ்வுலகத்தில் இயல்பாகவே துன்பம் நிறைந்திருக்கிறது. அதை ஏன் இன்னும் அதிக துன்பகரமானதாகச் செய்யவேண்டும்! மனிதர்கள் செய்யக்கூடிய அக்கிரமங்களும், கடவுளின் அநியாயமும் நாளுக்கு நாள் விருத்தியாய்க்கொண்டே வருகின்றன. அவைகள் விருத்தியடைவதற்குக் காரணம் பழக்க வழக்கங்களுக்கும் மூடநம்பிக்கைகளுக்கும் மனிதர் உட்படுவதேயாகும். அவைகளை எதிர்த்துப் போராடவேண்டியதுதான். அந்தத் தைரியம் நமக்கு வேண்டும். கடந்துபோனவைகளைக் குறித்து நாம் சிந்திக்கவேண்டியதில்லை. இந்த வாழ்க்கையை எவ்வளவு சௌக்கியத்துடன் அனுபவிக்கக்கூடுமோ, அவ்வளவு சௌக்கியத்துடன் நாம் அனுபவிக்க முயற்சிக்க வேண்டும்' என்று காந்தி கூறினாள்.

'செல்லம்மாளே! இக்குழந்தை சொல்லிய வார்த்தைகள் உண்மையென்றே எனக்குத் தோன்றுகிறது' என்று சுப்பராவ் சொன்னார்.

அச்சமயத்தில் ஒரு பெரிய அலை கரையின்மீது மோதிற்று. சுப்பராவ்மீதும் அவருக்கு அருகில் நின்றுகொண்டிருந்த செல்லம்மாளின் மீதும் கடல் நீர்த்துளிகள் மழைத்துளிகளைப்போல விழுந்தன. அந்த நீர்த்துளிகள் அவர்கள் தலையின் மீதும் விழுந்தன.

'அந்த நீர்த்துளிகள் கடவுளால் தெளிக்கப்பட்ட, மந்திர உச்சாடனம் செய்யப்பட்ட புண்ணிய தீர்த்தமாகும். உங்களைக் கடவுள் ஆசீர்வதிக்கின்றார். ஆகவே, இதுவே உங்களுடைய கலியாணம் என்று நினைத்துக்கொள்ளுங்கள்' என்று கமலா அவர்களிருவரிடமும் கூறினாள்.

'காந்தியே, நாம் இப்போது வாழ்க்கையின் சந்தோஷத்தைக் குறிக்கும் நாட்டியம் ஆடுவோம். இதுதான்

வாழ்க்கை என்னும் நாட்டியம். இறந்துபோதல் என்னும் நாட்டியம் முன்னமேயே ஆடியாய்விட்டது' என்று கமலா சொல்லவே, அந்தச் சிறுமிகள் இருவரும் அவர்களுடைய பெற்ளேர்களின் முன்பாக ஆனந்தக் கூத்தாடினர்கள். 'சந்தோஷத்தின்மீது நம்பிக்கையும் திடமான புத்தியும் இருந்தால், துன்பங்கள் கலக்கும்போது அவைகள் இன்பமாக மாறிவிடும்' என்னும் கருத்துள்ள பாட்டுக்களை அவர்கள் பாடினர்கள்.

பிறகு கமலா, செல்லம்மாளின் கையைப் பிடித்துச் சுப்பராவுடைய கைகளில் வைத்து, 'இப்பொழுது நமது பெற்ளேர்களிடமிருந்து நல்ல வெகுமதிகளை இக்கலியாண காலத்தில் நாம் எதிர்பார்க்கவேண்டும்' என்று காந்தியிடம் கூறினள்.

* * *

என்னுடைய சிநேகிதன் தான் சொல்லுவதை நிறுத்திவிட்டு, 'இப்போது நான் சொன்னதில் நம்பிக்கை ஏற்பட்டதா?' என்று கேட்டான்.

'உனக்கு நல்ல திருஷ்டாந்தம் கிடைத்திருக்கிறது' என்று நான் சொன்னேன்.

# குமுதினி



ஸ்ரீ ரவீந்த்ரநாத் டாகுர் எழுதியது

ஸ்ரீமதி ரங்கநாயகியம்மாள்

இனிய எளிய தமிழ்நடையில் மொழிபெயர்த்தது.

நல்ல கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டது

இந்நூலைப் பற்றிய முக்கிய அபிப்பிராயங்கள்

தினகரன்—மானிட வாழ்க்கையில் ஏற்படும் பல துன்பங்களை உணர்ச்சி ததும்பும் முறையில் நாவலாசிரியர் சித்திரித்துக் காட்டியிருப்பது போற்றத்தக்கது.

தனவணிகன்—எளிய தமிழில் இனிய நடையில் டாகுர் அவர்களின் கதையை விளங்க வைத்த பெருமை அம்மையாரைச் சார்ந்தது.

தாருல் இஸ்லாம்—முதற் பக்கம் முதல் கடைசிப் பக்கம் வரையில் "அடுத்தது என்ன?" என்று வாசகர்கள் கேட்கக் கூடிய உணர்ச்சியையும் உற்சாகத்தையும் பெருக்கிக்கொண்டே போகும் முறையிலே, இக்கதையின் போக்கு அமைக்கப்பட்டிருக்கிறது.

விலை ரூ. 1—8—0

கலைமகள் சந்தாதார்க்கு ரூ. 1—2—0

PRINTED BY R. NARAYANASWAMI IYER
AT THE MADRAS LAW JOURANAL PRESS. MYLAPORE, MADRAS.

PRINTED AT THE MADRAS LAW JOURNAL PRESS, MYLAPORE, MADRAS.